# பகட்டாகப் பவனிவரும் பரம்பரைப் பாணி

# அரவிந்த்

தரத்திலுயர்ந்த துணிகளால் மேலும் வண்ணச் சிறப்பு, கோலாகலம்.

வகையறுக்களில் சில:

சான்போரைஸ்டு பாப்லின்கள்:

ஷர்ட்டிங்குகள்: ஸ்ட்ரைப், டாபி, செக், பைஜாமா.

வேட்டிகள்: மெர்ஸரைஸ்டு லான் . 5531

சூட்டிங்குகள்: கேபர்டின்.

பிரின்டுகள்: பிரின்டெட் லான்கள்,

வாயில்கள், பாப்லின்கள்.

நெசவு செய்த கலர் புட்டாக்கள்.

லினோக்களிலும் புட்டாக்களிலும்

2x2 ஃபேன்ஸி ஃபுல் வாயில்கள்.




டெபிஸேஸ்டு* மற்றும் டெபிஸேஸ்டு
இரட்டிப்புப் பரிசோதனை பெற்ற

*Regis...... sers

அரவிந்த் மில்ஸ் லிமிடெட்
அகமதாபாத்.



# கல்கி

## பொருளடக்கம்

என் உள் மனத்துக்கு
அழகு கொடு.
ஏனெனில். எனக்கு
வெளி அழகு தேவை
யில்லே. அறிவாளிகளுக்கே
செல்வத்தைக் கொடு.
ஏனெனில் எதுவும்
தேவையிராதவனே
கடவுளேப் போல
இருக்க முடியும்.

— சாக்ரடீஸ்

விசுவாவசு மாசி 30 ❋ மார்ச் 13



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

சுகார்னோ
இந்தோனீசியா
கம்யூனிஸ எதிர்ப்பு


புதிதாக விடுபட்ட நாடுகள்
ராணுவ ஆட்சி சர்வாதிகாரம்
நெருப்பும் விட்டிலும்


அசோக மேத்தா
"கி.பி 2000-ல் சுபிட்ச இந்தியா தெரிகிறது"
தீர்க்கதரிசி
PK

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 25 ❋ இதழ் 33



# முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை

நிதி அமைச்சர் மாறினாலும் வரிக் கொள்கை மட்டும் மாறவில்லை. மந்திரி மாறினால் போதாது; வரிக் கொள்கைக்குக் காரணமான சர்க்காரே மாற வேண்டும் என்ற உணர்வைப் புது பட்ஜெட் அழுத்தமாக ஊட்டி உள்ளது.

ஏற்கனவே வரிகள் நம் நாட்டில் உச்ச கட்டத்தை அடைந்து விட்டன; மக்களின் தாங்கும் சக்தி அடியோடு முறிந்து போய் விட்டது; தொழில்கள் ஸ்தம்பித்துப் போய் விட்டன; விலைவாசிகள் இனியும் உயர்ந்தால் மக்களின் அமைதிக்கே ஊறு விளையக் கூடும்; எனவே புது வரிகள் விதிக்கப்படலாகாது, மாறாக நிவாரணம் அளிக்கப்பட வேண்டும் என்றெல்லாம் பொருளாதார அறிஞர்களும், நாட்டின் நலனைக் கருத்தில் கொண்ட தலைவர்களும், தொழில் அநுபவஸ்தர்களும் படித்துப் படித்துச் சொன்னார்கள். இவற்றை யெல்லாம் கேட்டு உணர்ந்து கொண்டது போலக்கூட அமைச்சர்களும் பேசினார்கள். ஆனால் இறுதியில் செவிடன் காதில் ஊதின சங்கைப் போலவே ஆகியுள்ளது. நேர்முக வரிகள் மூலமும், மறைமுக வரிகள் மூலமும் புதிதாக ரூ. 101 கோடிக்கு வரிகள் விதிக்கப்பட்டுள்ளன. தீ பரவி வரும் போது அதை அணைக்க முயற்சி எடுக்க வேண்டும். புதிய பட்ஜெட் தீ அணைப்புக்கு உதவவில்லை; தீ பரவுவதை வெறுமே பார்த்துக் கொண்டும் இருக்கவில்லை; அதற்கு மேலும் எண்ணெய் வார்த்திருக்கிறது. புதை சேற்றில் மேலும் ஆழமாகக் காலை வைத்து நாட்டை அழுத்திப் புதைக்கும் திட்டமாகவே இவ்வாண்டு பட்ஜெட் உருவாகியுள்ளது.

வருவாயைக் குறைத்து மதிப்பீடு செய்வது; செலவைப் பெருக்கிக் காட்டுவது; சில இனங்களில் சலுகை அளிப்பது போல் நிவாரணங்கள் கொடுத்து, இதர இனங்களில் அதற்கும் அதிகமாகப் புது வரிகளைப் புகுத்தி நிகர வருமானத்தை உயர்த்திக்கொள்வது;-இத்தியாதி சம்பிரதாயங்களை திரு ஸச்சீன் சௌத்ரி மிக சாமர்த்தியமாகச் செய்திருக்கிறார்.

மத்தியதர வருமானக்காரர்களுக்கு வருமான வரி செலுத்த வேண்டிய அடித்தளத்தைக் கொஞ்சம் உயர்த்தியிருக்கிறார். கட்டாய 'அன்யூடி' சேமிப்பிலும் வரம்பை உயர்த்தியுள்ளார். இவை வரவேற்க வேண்டியவைதாம். ஆனால் இதற்கு ஈடாக வருமான வரியில் பத்து சதம் உபரியாக ''ஸர் சார்ஜ்'' விதிக்கப் பட்டிருக்கிறது. சலுகையால் கஜானா இழப்பதைவிட அதிகமாக இதனால் வருமானம் கிட்டும். அதாவது மக்கள் தாங்கும் சுமை முன்னிலும் கூடும்.

நாட்டின் தொழில்களை வளர்ப்பதிலும், தேசிய வருவாயைப் பெருக்குவதிலும் ஈடுபட்டுள்ள தொழில் கம்பெனிகள் விஷயத்திலும் இதே முறைதான் கையாளப் பட்டிருக்கிறது. ஏற்கனவே வரி செலுத்திச் சேமிப்பு நிதியாகக் கம்பெனிகள் ஒதுக்கி வைத்த உபரிப் பணம் பங்குதாரர்களுக்குப் 'பரிசுப் பங்குகளாக'க் கொடுக்கப்பட்டால் அவற்றுக்குப் பன்னிரண்டரை சதம் வரி கொடுக்க வேண்டும் என்று இதுவரையில் அமுலிலிருந்த விதியை நிதி அமைச்சர் ரத்து செய்ததை வரவேற்க வேண்டும். பங்குதாரர்கள் போட்ட மூலதனத்துக்கு 'டிவிடெண்டு' என்று ஆண்டு தோறும் விநியோகிக்கப்படும் தொகைமீது ஏழரைசத வீதம் கம்பெனிகள் தனி வரி செலுத்த வேண்டும் என்று இது வரையில் இருந்த விதியைத் தளர்த்தி, பத்து சதம் டிவிடெண்டு உபரியாகக் கொடுக்கப்படும் தொகைக்கு மட்டும் இந்தத் தனி வரியைக் கொடுத்தால் போதும் என்று

சலுகை காட்டியுள்ளார். இதுவும், சின்ன சலுகைதான் என்றாலும், வரவேற்க வேண்டியதுதான். ஆனால் இந்தச் சிறு நஷ்டத்தை ஈடுசெய்வதற்காகக் கம்பெனிகளின் 'கார்ப்பரேட் வரி' என்னும் ஆதார வரிப் பணத்துடன் இனி 10 சதம் உபரி வரி (சர் சார்ஜ்) சேர்த்துக் கொடுக்க வேண்டும் என்று நாசூக்காக விதிக்கப்பட்டிருக்கிறது. இரண்டையும் சீர்தூக்கிப் பார்க்கும்போது புதிதாகக் கிடைத்த சலுகையைவிடக் கொடுபட வேண்டிய வரிச் சுமையே அதிகம் எனத் தெரிகிறது. செலவு வரியும், நன்கொடை வரியும் சர்க்காருக்கு விசேஷமாக வருமானம் தராமல், வசூலிக்கும் செலவை மட்டும் உயர்த்திய அநாவசிய வரிகள். இவை தொழில் துறையினருக்குப் பீதியை உண்டாக்கி உற்பத்திக்கு ஊறு அளித்தன. இவை போன்ற அர்த்தமற்ற வரிகளை ரத்து செய்தோ விகிதங்களைக் குறைத்தோ நிதிமந்திரி செய்த நல்ல காரியத்துக்கு நேர் விரோதமாக மொத்தத்தில் கிடைக்கும் வரி வசூலைக் கணிசமாக உயர்த்தியிருப்பது வருந்தத் தக்கது.

பணக்காரர்களை மட்டும்தான் பாதிக்கும் என்று பொதுவில் தவறாகக் கருதப்படும் வரிகளை மாற்றியதன் லட்சணம் இப்படியென்றால், மக்களே தரவேண்டிய மறைமுக வரிகளைப் பற்றிச் சொல்லவே தேவையில்லை. சர்க்கரை, ஜவுளி இழைகள், சன்னரக ஆலை நூல்கள், நைலான் வகை ஜவுளிகள், சுருட்டு, சிகரெட்டு, புகையிலை இனங்கள், விசேஷ ரக மசல் எண்ணெய் போன்ற இனங்களின் மீது எக்ஸைஸ் வரிகள் உயர்த்தப்பட்டிருக்கின்றன. எக்ஸைஸ் வரி என்றால் என்ன என்று மக்களுக்குத்தான் அநுபவ பூர்வமாகத் தெரியுமே. எந்த இனங்களின் மீது வரி விதிக்கப்பட்டிருக்கிறதோ, அவற்றின் விலை கூடுதலாகும்—வரியின் அளவுக்கு அல்ல, அதைவிட இருமடங்கு அல்லது மும்மடங்கு! விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதன் அவசியத்தை வாய் ஓயாமல் முழங்கி வந்தவர்கள் இப்படி நடவடிக்கை எடுத்திருப்பது விந்தை!

ஏற்கனவே உள்ள வரிவிகிதங்கள் மூலமே ரூ. 210 கோடி உபரியாகக் கிடைக்கக் கூடிய வரவு செலவுக் கணக்கில் அவசியமில்லாத திட்ட இனங்களுக்காக 1966–67 ஆண்டில் ரூ. 2080 கோடி முதலீடு செய்யத் தீர்மானித்து விட்டதால் ரூ. 117 கோடிக்குப் பற்றுக்குறைக் கணக்கு காட்டப்பட்டிருக்கிறது. மக்கள் உபயோகிக்கும் அன்றாடப் பண்டங்கள் சரஸமான விலையில் கிட்டுவதற்கு வழி செய்ய இயலாத சர்க்கார், அவசியமற்ற டாம்பீகத் திட்டங்களுக்காக இரண்டாயிரம் கோடிக்குமேல் செலவு செய்தே தீருவதென முடிவு செய்திருப்பது நமது துர்ப்பாக்கியம். இந்தத் திட்ட இனங்கள் அப்படி யொன்றும் தவிர்க்க முடியாதவையோ, அத்தியாவசியமானவையோ அல்லது ஒரு ஆண்டிற்குள் செலவு செய்து முடிக்கக் கூடியவையோ அல்ல. சிலவற்றைத் தள்ளிப் போடுவதாலோ 5 அல்லது 10 சதவிதம் அவற்றின் முதலீட்டைக் குறைப்பதாலோ, நாட்டின் பொருளாதார நிலை மந்தம் அடைந்துவிடாது என்று அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால் திட்டக் கமிஷன் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டிருக்கும் வரையில் நிதிமந்திரியின் செயல் சுதந்திரம் அதற்குப் பணம் தேடித் தருவதில்தான் பயன்படுகிறது. நிர்வாகத்தில் சிக்கனம் செய்ய வேண்டும். ஊதாரித்தனமான டம்பாச்சாரி திட்ட இனங்களைக் கைவிட வேண்டும். தீவிரமாக முனைந்தால், இப்போது விதிக்கப்பட்டுள்ள ரூ. 100 கோடி புது வரிகளை விதிக்காமலே வரவு செலவைச் சரிக்கட்டியிருக்க முடியும். இதைப் பற்றிச் சந்தேகமேயில்லை. ஆனால் காங்கிரஸுக்கோ திட்டத்தில் முன் வைத்த காலைப் பின்வைக்கக் கூடாது என்ற மூடப் பிடிவாதம் உள்ளதே தவிர நாட்டு நலனில் அக்கறையில்லை.

சர்க்கார் உத்தேசித்துள்ள பெரும் செலவுக்கும் அதற்குக் கிடைக்கக் கூடிய வருமானத்துக்கும் இடையுள்ள பற்றுக்குறையை அதிக வரிகளின் மூலம் பூர்த்தி செய்தாலும் அல்லது பணவீக்கத்தின் மூலம் பூர்த்தி செய்தாலும் மக்களைப் பொறுத்தமட்டில் வித்தியாசமில்லை. நேரடியாக அதிக வரி செலுத்தினாலும், பண வீக்கம் காரணமாக அதிக விலை கொடுத்தாலும் மக்கள் படும் இன்னல் ஒன்றேதான். கொலை செய்யும் ஆயுதம் தூக்குக் கயிறு, கத்தியா, மின்சார நாற்காலியா, துப்பாக்கியா, விஷமா என்று பாகுபடுத்திப் பார்ப்பதால் கொலை செய்யப்படுபவனுக்கு என்ன பயன்? நிதி மந்திரிகளும், பொருளாதார நிபுணர்களும்

## குமரி மாவட்டத்தில் ராஜாஜி

குமரி மாவட்டத்தில் சுதந்திரக் கட்சிப் பொதுக்கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக ராஜாஜி அவர்கள் 10–3–66 காலை 6-30 மணிக்குச் சென்னையிலிருந்து விமானத்தில் திருவனந்தபுரத்துக்குப் புறப்படுகிறார்கள்

| | |
|---|---|
| 10–3–66 | மாலை 6-30 மணிக்கு மார்த்தாண்டத்தில் பொதுக்கூட்டம். |
| | இரவு 8-30 மணிக்குத் 'திங்கள் சந்தை' யில் பொதுக்கூட்டம். |
| 11–3–66 | மாலை 6-30 மணிக்கு நாகர்கோயிலில் பொதுக் கூட்டம். |
| 12–3–66 | மாலை 6-30 மணிக்குத் தக்கலையில் பொதுக் கூட்டம். |
| | இரவு 8-30 மணிக்குக் கோட்டாரத்தில் பொதுக் கூட்டம். |
| 13–3–66 | பிற்பகல் 3-45 மணிக்கு விமானத்தில் சென்னை திரும்புகிறார். |

பணவீக்கம் — அமிதவரி இவை பற்றிப் பாகுபடுத்திப் பேசுவதும் மக்களைப் பொறுத்த மட்டில் இது போன்றதே.

இவ்வளவு வரிகளைப் போட்ட பின்னரும் ரூ. 25 கோடிக்குப் பற்றாக்குறை இருக்குமாம். அதற்கும் வரி போட்டால் மக்களுடைய முதுகெலும்பு முறிந்து விடுமாம். அதனால் அதைக் காருண்யத்துடன் அப்படியே விட்டு வைத்திருக்கிறாராம் நிதி அமைச்சர். பல ஆயிரம் கோடிக் கணக்கில் வரி வசூலித்துக் கொண்டு வரும் நிலைமையில் மக்களின் சகிக்கும் அளவை இருபத்தைந்து கோடி ரூபாய் வித்தியாசத்தில் இவ்வளவு நுட்பமாக மதிப்பீடு எப்படிச் செய்தார் என்பது நிபுணர்களுக்கும் விளங்காத நுட்பம்!

ஆனால் மக்களுக்குத் தெரியும் இதன் உண்மை. நோட்டை அச்சடித்து வழங்குவதும் ரிஸர்வ் பாங்கி மூலம் அதைச் சர்க்கார் கடன் பத்திரங்களுக்காக ஈடு செய்வதும், கடன் சுமையை மக்கள் மீது சுமத்துவதும், ரூபாயின் மதிப்பு படிப்படியாக ஒன்றுமில்லாமல் தேய்வதும், காங்கிரஸ் அரசாங்கம் கையாளும் முறைகள். நோட்டை வேண்டுமானால் அச்சடித்து வழங்கலாம். ஆலைகளில் உற்பத்தியை இவ்வளவு எளிதாகப் பெருக்க முடியாது. உற்பத்தி அதிகரிப்பதற்கான வழி வகைகளைச் செய்தாலொழிய, நாட்டில் பொருளாதார முன்னேற்றம் ஏற்படாது. காங்கிரஸ் ஆட்சியின் போக்கில் இந்தப் பிரத்தியட்ச உணர்ச்சி இன்னமும் ஏற்படவில்லை. இவ்வாண்டு பட்ஜெட்டுக்கு ஏதாவது பொருள் உண்டு என்றால், மக்களின் உண்மை நிலையையும், உள்ளுணர்ச்சிகளையும் மதிக்காத சர்க்காரின் ஆணவம்தான் அது. இதற்கு மாற்று மக்கள் கையில் உண்டு. அதைப் பிரயோகிக்க வேண்டிய தருணம் விரைவில் வரப் போகிறது. அத்தருணத்தில் அதைச் சரிவர பிரயோகிக்க இப்போதே சங்கல்பம் செய்து கொள்ள வேண்டும் என்பதற்கு இவ்வாண்டு பட்ஜெட் சவால் விடுகிறது.

**நெருக்கடி நிலை :**

# நாட்டின் ஏகோபித்த எதிர்ப்பு

**தா**ஷ்கெண்ட் ஒப்பந்தத்துக்குப் பிறகும் நெருக்கடி நிலைமையை நீடித்து மக்களின் சுதந்திர உரிமைகளைப் பறிப்பது நியாயமல்ல என்பதை நாட்டில் உள்ள எல்லா எதிர்க் கட்சித் தலைவர்களும் அழுத்தமாக எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். இதில் தீவிர கம்யூனிஸ்டுகளும் சுதந்திரக் கட்சியினரும் ஒன்றாக நிற்கிறார்கள். நெருக்கடி நிலைமை நீடிப்பதை ராஜாஜி அவர்கள் எவ்வளவு வன்மையாக ஆட்சேபிக்கிறார் என நாம் அறிவோம். இதே அளவுக்குக் கம்யூனிஸ்ட் தலைவர்களான டாங்கேயும், ஹிரேன் முகர்ஜியும் தங்கள் எதிர்ப்பை வெளியிட்டிருக்கிறார்கள். மற்றும் ஜனசங்கத் தலைவர் அதுல் பிஹாரி வாஜபேயர், பிரஜா சோஷலிஸ்ட் தலைவர்கள் துவிவேதி, நாத்பாய், சம்யுக்த சோஷலிஸத் தலைவர் ராம்ஸேவக் யாதவ் இவர்களும் நெருக்கடி நிலைமையை உடனே ரத்து செய்ய வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியுள்ளனர். காங்கிரஸ் கட்சியின் யதேச்சாதிகாரம் ஒன்றுக்கு மட்டுமே நெருக்கடி நிலைமை உபயோகமாவதால்தான் இவ்விதமாக எல்லா எதிர்க் கட்சியினரும் ஒரே குரலில் இதை எதிர்க்கிறார்கள். சுயேச்சையாக விளங்கும் தலைவர் கிருபளானி அவர்களும், கட்சிச்சார்பற்ற ஸ்ரீ ஜயப்பிரகாச நாராயணரும் இதே கருத்தைத் தெரிவித்துள்ளனர். ஸ்ரீ க. சந்தானம் அவர்களும் இந்த அபிப்பிராயத்தைப் பலமுறை வன்மையாக வெளியிட்டிருக்கிறார்.

கட்சி அரசியலில் சேராத நாட்டின் பிரமுகர் பலரும் இவ்வாறே ஆட்சேபித்துள்ளனர். இந்தியாவின் முன்னாள் பிரதம நீதிபதிகள் மூவரும், ராஜ்யங்களைச் சேர்ந்த முன்னாள் நீதிபதிகள் பலரும், வழக்கறிஞர் சங்கத் தலைவரும், முக்கியமான சில பத்திரிகை ஆசிரியர்களும் ஒன்று சேர்ந்து ராஷ்டிரபதிக்கும் பிரதமருக்கும் அனுப்பியுள்ள ஒரு மகஜரில் நெருக்கடி நிலையை உடனடியாக ரத்து செய்ய வேண்டுமெனக் கோரியுள்ளனர். முன்னாள் அட்டர்னி ஜெனரலாக இருந்த ஸெடல்வாட் அவர்கள், ''நெருக்கடி நிலையை நீடிப்பது சட்டபூர்வமாக ஒரு சர்வாதிகாரத்தை அமைப்பதற்கே ஒப்பாகும்'' என்று அழுத்தம்திருத்தமாகக் கூறியிருக்கிறார்.

இவை எல்லாவற்றையும்விட முக்கியமாக, முன்னாள் சட்டமந்திரியாக இருந்த ஸ்ரீ அசோகஸென் அவர்களே நெருக்கடி நிலையை இனியும் நீடிப்பதற்கு முகாந்திரம் இல்லை என்று கூறியுள்ளார். 'சீன அபாயத்தைக் காட்டி நெருக்கடி நிலையைத் தொடரலாகாது; ஏனெனில், அது நிரந்தரமான அபாயம்' என்றும் அவர் சுட்டிக்காட்டியிருப்பது விசேஷம்.

எனவே, இன்றைய சட்டமந்திரியும், உள்துறை மந்திரியும் நெருக்கடி நிலைமையை நீடிப்பதில் எவ்வளவு பிடிவாதமாயிருப்பினும் பிரதமரவர்கள் நாட்டின் ஏகோபித்த குரலுக்கு மதிப்பளித்து நாட்டில் சகஜ நிலையைத் தோற்றுவிக்க வேண்டும். ''இவ்விஷயத்தைத் தீர ஆலோசிப்போம். அவசியத்துக்கு அதிகமாக ஒருநாள்கூட நெருக்கடி நிலையை நீடிக்க மாட்டோம்'' என்று பிரதமர் கூறியிருப்பதை வரவேற்கிறோம். எனினும், இப்போதே பல மாதங்களாக அவசியத்துக்குப் பின்னும் நெருக்கடிச் சட்டம் அமுலில் இருந்து வருவதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறோம். இந்தியாவில் ஜனநாயக ஆட்சி நடப்பதாக வெளி உலகுக்கு நம்பிக்கை ஊட்டவேண்டுமாயின் உடனடியாக நெருக்கடிப் பிரகடனத்தை ரத்து செய்தாக வேண்டும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

உணவு 'மண்டல'க் கட்டுப்பாட்டைப் பற்றிப் பேசும்போது ஒரு முக்கியமான விஷயத்தைக் கவனிக்க வேண்டும். 'உணவு மண்டலம்' என்பது ஒரு பெரிய பிரதேசத்தைக் குறிக்கும். ஆனால் உண்மையில் உணவுக் கட்டுப்பாடுகள் இத்தகைய ஒரு மண்டலத்துக்குள் தானியப் போக்குவரத்து நடைபெறுவதற்கு மட்டுமா விதிக்கப்பட்டுள்ளன? ஒரே மாவட்டத்தில் உள்ள ஒரு கிராமத்திலிருந்து அடுத்த கிராமத்துக்குத் தானியம் கொண்டு செல்லவும் அல்லவா தடைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன? இத்தகைய தடைகளால் சிறிய உத்தியோகஸ்தர்களுக்கு லாபம் கிடைக்கிறது. எனவே அவர்கள் இவற்றை ஆதரிக்கிறார்கள். கள்ளக்கடத்தல் காரர்களும் தடைகளை விரும்புகிறார்கள். இவர்களுக்கெல்லாம் ஊக்கமளிக்கும் தேச விரோதச் சட்டங்களால் ஏற்படும் ஊழல், வார்த்தைக்கு அடங்காத வெட்கக்கேடாகும். உணவுக் கட்டுப்பாட்டு விதிகள் ஊழலின்றி அமுலாக்கப்படும் என்றே வைத்துக் கொண்டாலும்கூட, இக்கொள்கையால் ஏற்படும் குறுகிய பிரதேசப் பித்தின் தீமையை மறப்பதற்கில்லை. 'விரைவில் யோசிக்கப்படும்' என்ற வார்த்தையில் திருப்தியடைந்துவிடாமல், உடனடியாக உணவுதானியப் போக்குவரத்துக் கட்டுப்பாடுகளை நீக்க வேண்டுமென வற்புறுத்தியாக வேண்டும்.

ஃ ஃ ஃ

கிழக்கு எல்லையில் உள்ள நாகர்கள் முதலிய மலைவாசிகளின் பிரச்னை பற்றிச் சில வார்த்தைகள்: வீரமும், இடசங்கற்பமும் கொண்ட இம்மக்களை இந்திய சர்க்கார் நட்புடன் அன்பாக நடத்த வேண்டும். அவர்கள் சுதந்திரமாகவும் சந்தோஷமாகவும் இருப்பதாக எண்ணுமாறு செய்துவிட்டால் நமக்குப் பொன்போல் நல்லவர்களாகி விடுவார்கள்; பொன்னைவிடவே உயர்வாகி, நம் நாட்டின் எல்லையில் அந்நியரை எதிர்க்கும் உறுதியான அரணாகிவிடுவார்கள். இவர்கள் தமது சுதந்திர உணர்வைக் காப்பாற்றிக் கொள்வதற்கு நாம் அனுமதிப்பதால் எந்த நஷ்டமுமில்லை. மாறாக அவர்களின் பலத்தையும், தீரத்தையும் அழிப்பதால் நமக்கே நஷ்டம் உண்டாகும்.

நாம் எங்கணும் நட்புறவுகளை வளர்ப்போம். நமது நண்பர்கள் தாங்கள் விரும்பும் சுதந்திரத்தை அடைந்த திருப்தியில் பலமாக வாழ்ந்து நமக்கும் உதவியாக நிற்பதற்கு வழிகாண்போம். தாங்கள் அடிமைப்பட்டிருப்பதாக அவர்கள் எண்ணி நமக்கு விரோதமாக நடக்குமாறு செய்வதால் என்ன பயன் ?

ஸ்ரீ ஜவாஹர் அவர்கள் இந்த மலைவாசிகளின் உடையை அணிந்து, அவர்களைப் போல் ஆடிப்பாடியதுண்டு. அவரது அன்பு இத்துடன் சிறுபிள்ளைத்தனமாக முடிந்து விடவில்லை. நான் மேலே கூறிய பரந்த நோக்கங்களை நேரு அவர்கள் வெளிப்படக் கூறாவிடினும் அவற்றின் அடிப்படையிலேயே மலைக்குடியினரிடம் அன்பு பூண்டிருந்தார். அவர் குழந்தைத்தனமாக அடைந்த இன்பத்தில் உண்மையான ராஜநீதி இருந்தது. நமது எல்லையிலுள்ள இம்மக்களை நாம் நெருக்கமான நண்பர்களாகச் செய்து கொள்ளாவிடில், சீனத்தின் பரவி வரும் ஆதிக்கம் அவர்களை நமக்கு எதிராக நிறுத்தி வைக்கக் கூடும் என்பதை மறக்காதிருப்போமாக. 'புரட்சிக்காரர்களைக் கண்டிப்புடன் நடத்துவது' போன்ற வார்த்தைகளை விட்டு, சமத்துவத்துக்கும் தன்மானத்துக்கும் உகந்த வார்த்தைகளைக் கூறி நட்பை வளர்த்துக் கொள்வோம்.

# வீர சுவர்க்கம் புகுந்த வீர சாவர்க்கர்

சிலருடைய வாழ்க்கையே ஓர் அற்புதக் கதையாகிவிடுகிறது. சமீபத்தில் நம்மைவிட்டு நீங்கிய சாவர்க்கரின் வாழ்க்கை இந்திய சுதந்திரப் போராட்ட சகாப்தத்தில் ஓர் அற்புத அத்தியாயமாகும். பாரத சுதந்திரத்துக்காகத் தம்மால் இயன்றதவ்வளவையும் செய்வதாகத் துர்க்கா தேவியின் முன் பதினாறு பிராயத்துச் சாவர்க்கர் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டதிலிருந்து ஒரு வீர காதையே உருவாயிற்று. இங்கிலாந்தில் வழக்கறிஞர் படிப்பை நிறுத்திவிட்டு அவர் புரட்சி இயக்கத்தில் குதித்ததும், பாரதத்துக்குத் தப்பி வருவதற்காகச் செய்த சாகஸங்களும், பிரிட்டிஷ் ஆதிக்கத்தை வன்முறையில் கவிழ்ப்பதற்காக வகுத்த திட்டங்களும், அந்தமானுக்குத் தேசப் பிரஷ்டம் செய்யப்பட்டபோது நெஞ்சு குமுறிச் சிறைச் சுவர்களிலெல்லாம் வீரக் கவிதைகள் பொறித்ததும் இப்போது ஒரு காவியமாகவே தோன்றுகின்றன. காந்தி யடிகள் தமது அஹிம்ஸா ஆயுதத்தை ஏந்திப் பாரதத்துக்குத் தலைமை பூண்ட பின் சாவர்க்கர் அவர்கள் தமது புரட்சித் திட்டங்களைவிட்டு, ஓரளவு முன்னணியிலிருந்து விலகி, ஹிந்து மகாசபைத் தலைவராகப் பணியாற்றினார். இறுதி வரை அவர் பாரதத்தின் நலனில் உள்ளார்ந்த ஈடுபாடு கொண்டிருந்தார். தமது மறைவையொட்டி விடுமுறை அளிப்பதையும், கடையடைப்புச் செய்வதையும் ஆட்சேபித்து அவர் மரண சாஸனம் எழுதியது இந்த ஈடுபாட்டையே பிரதிபலிக்கிறது. பாரதத் தாய் தனது வீரப் புதல்வரொருவரை இழந்துநிற்கிறாள்.



# எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் இருங்கள் நாள்முழுவதும் சுறுசுறுப்பாக இயங்குவதற்கான புத்துணர்ச்சிக்கு

# புதிய கால்கேட் லோர்னே டால்க்

புதிய கால்கேட் லோர்னே டால்க்கின் புதுப்பிக்கும் நறுமணம் உங்களைக் குளுமையுடனும், புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது....நாள் முழுவதும் அந்தத் துடியான சுறுசுறுப்பைத் தருகிறது. இளமைத் துடிப்பும், சுறுசுறுப்பும், விளையாட்டுகளில் பிரியமுள்ளவர்கள் குறிப்பாக கால்கேட் லோர்னே டால்க் வியர்வையைத் துரிதமாக கிரகித்துக்கொண்டு தாங்கள், நாள் முழுவதும் உற்சாகமாக இருக்க உதவுவதை நன்கு அறிவார்கள்!

இது சிக்கனமானதும்கூட! உங்கள் குடும்பத்தினருக்கு கால்கேட் லோர்னே டால்க்கை வாங்குங்கள்.—அது சுறுசுறுப்பான நாகரீக மக்களுக்கேற்ற புதியதொரு பரவசமூட்டும் நறுமணம் கொண்டது!








**புதிய**
சிக்கனமான
டால்க் நவீன
டின்னில்

# ஆயுட்கால செவியின்பத்தைப் பெற்று மகிழுங்கள்!



மாடல் யு-819
5 வால்வுகள், 3 பாண்டுகள்
ப்ளாஸ்டிக் காபினெட், ஏஸி/டிஸி
ரூ. 298.00



மாடல் யு-806/ஏ-806
6 வால்வுகள், 3 பாண்டுகள், மரக் காபினெட்,
யு-806-ஏஸி/டிஸி ஏ-806-ஏஸி
ரூ. 395.00



மாடல் ஏ-786(ஹை-ஃபி செட்)
6 வால்வுகள், 5 பாண்டுகள், 2 ஒலிபெருக்கிகள்,
மரக் காபினெட், ஃபெர்ரைட் ஏரியல், ஏஸி
ரூ. 575.00

*(விலைகள் சுங்கவரி உள்பட: இதர வரிகள் தனி)*

## நேஷனல் எக்கோ

இந்தியாவின் ஒரே
மான்ஸூனைஸ்டு
ரேடியோ!

**ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்,**
பம்பாய் • கல்கத்தா • மதராஸ் • டெல்லி • பாட்னா • பெங்களூர் • ஸிகந்திராபாத்

LPE-Aiyars NE 4 TAM

திரைப்பட விமரிசனம்

# முகராசி



**ஜோ**சிக்காரர்களான தேவர் பிலிம்சாரின் முகராசி படக் கதை மக்கள் திலகத்தின் முகராசியை மனத்தில் கொண்டே எழுதப்பட்டிருக்கிறது. ரசிகர்களில் சிலர் 'பிட்டிலெஸ் தீ' என்ற ஆங்கிலப் படத்தையும் என்னதான் முடிவு படத்தில் ஒரு கதாபாத்திரத்தையும் நினைவுக்குக் கொண்டுவந்து முகராசியுடன் ஒப்புநோக்கி முகம் சுளிப்பதில் அர்த்தமே இல்லை.

எம். ஜி. ஆர். நீதியின் காவலர் இன்ஸ்பெக்டர் ராமுவாக வருகிறார். கம்பீரமும் கண்டிப்பும் நிறைந்ததோர் இன்ஸ்பெக்டரைத் திரையில் எதிர் பார்க்கும் நமக்கு ஏமாற்றம்தான் ஏற்படுகிறது. குஷாலாகச் சிட்டியடித்தபடி கல்யாண ஊர்வலத்துக்குக் காரை ஓட்டிச் செல்வது போல முதலில் அறிமுகப்படுத்தப்பட்டிருக்கிறார் மக்கள் திலகம். உடனே ஏரிக் கரையிலோ களத்து மேட்டிலோ கன்னியொருத்தி பாடியபடி கதாநாயகனை வரவேற்பதைத்தான் நாம் எதிர்பார்க்கத் தொடங்குகிறோம் -- மக்கள் திலகத்தின் மற்றொரு 'ஸ்பெஷாலிட்டி'யை மறந்து விட்டு. ஆனால் தேவர் மறக்கவில்லை. காதல் சேஷ்டைகளுக்கு முன்னால் கும்கும் குத்துகளுடன் ரசிகர்களின் அப்ளாஸ்களைப் பெறும்படி செய்கிறார். கதாநாயகனின் மேனாட்டு உடைப் பாணிக்கு ஏற்றபடி ஹோட்டலில் ரௌடிகளுடன் சண்டை இருக்கிறது.

ஜெயலலிதா வருகிறார் கதாநாயகியாக. உடற்பயிற்சிகளைச் செய்து காட்டும் சர்க்கஸ் வித்தைக்காரியைப் பார்ப்பது போல் இருக்கிறது. இளமைத் துடிப்பில் காதல் பித்து ஏறினால் இப்படித்தான் தரையில் விழுந்து புரள வேண்டுமோ? ஜெயலலிதாவின் சிலம்பப் பயிற்சி கதைக்குச் சம்பந்தமில்லா விட்டாலும் கவர்ச்சித் தோற்றத்துக்குக் கைகொடுத்து உதவுகிறது. எல்லாப் பண்டங்களும் விலை ஏறிவிட்ட இந்தக் காலத்தில் மிக மலிவாக எளிதாகக் கிடைப்பது இந்தத் திரைப்படக் காதல் ஒன்றுதான்!

மக்கள் திலகத்தின் அண்ணா சோமுவாக ஜெமினி கணேசன் வருகிறார். ஆனால் அவரைத் தம்பியாகத்தான் நம்மால் கற்பனை செய்ய முடிகிறது. சோமுவுக்குக் கால் முடமானாலும் நடிப்பில் சோடை போகவில்லை.

மனோரமா ஒப்பாரி வைக்கும் இடமும், போலீஸ் கான்ஸ்டபிள்கள் நாகேஷூம், ராமசாமியும் தங்களைத் தாங்களே தாக்கிக் கொண்டு தடுமாறும் கட்டமும் தமிழ்ப் படம் 1920ல் இருந்த நிலையிலிருந்து அதிக தூரம் முன்னேறி விடவில்லை என்பதை நினைவுபடுத்துகின்றன.

வில்லன் நம்பியாருக்கு வழக்கமான நடிப்பு.

ஐந்து பாட்டுக்களில் எதுவும் சிந்தையில் நிற்கவில்லை. ஆனால் ஒரே சீராகக் காதில் ஒலித்துக் கொண்டிருப்பது எம். ஜி. ஆர். வழங்கும் குத்துக்களின் 'கும் கும்' ஒலிதான்!




## வெங்காயம்



## மாதிரி...!

டில்லியில் நல்ல குளிர் காலம். எப்பொழுதும் பனியன், ஸ்வெட்டர், அதன் மேல் கவுன், கோட்டு என்று ஐந்தாறு உருப்படிகள் போட்டால்தான் சற்றுக் குளிர் தாங்கும். அன்று ஞாயிற்றுக்கிழமை. எல்லோருக்கும் அன்றுதான் எங்கள் ஊரில் வெள்ளிக் கிழமை. அதாவது எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் நாள். நந்தினிக்கும் எண்ணெய் தேய்க்க வெந்நீர் எடுத்து வைத்துவிட்டுச் சட்டையைக் கழற்ற ஆரம்பித்தாள் அம்மா. முதல் இரண்டு உருப்படிகள் கழற்றும்வரை சும்மா இருந்த நந்தினி, மூன்றாவது சட்டையைக் கழற்றும்போது சிணுங்க ஆரம்பித்தாள். கடைசியாகப் பனியனையும் கழற்றும்பொழுது, 'என்னம்மா, நான் என்ன, சப்ஜிக்கு நறுக்கும் வெங்காயம்முன்னு நினைக்கண்டியா? வெங்காயம் மாதிரி நீ சும்மா என்னை உரிக்கண்டே இருக்கியே!' என்றாள்.

—எஸ். பத்மினி, புது தில்லி-22

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில் ஈறுகளைப் பலப்படுத்துகிறது என்று




ஒழுங்காக உங்கள் ஈறுகளைத் தேய்த்துக்கொள்ளுங்கள் என்று பல் வைத்தியர்கள் உபதேசிக்கின்றனர். இதனால் கிடைக்கும் குளோரோபில் லின் முழுப்பலனையும் கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட்டில் பெற்று ஈறுகளை உறுதியாகவும், ஆரோக்கியமாகவும் ஆக்குவதுடன் பயோரியா வராமலும் தடுக்க முயலுங்கள். இந்த மேன்மையான குளோரோபில் டூத்பேஸ்ட், உலகத்தில் பெரிய, பல் தேய்க்க உதவும் இதனுள்ள சாதனங்களைத் தயாரிப்பவர்களின் தயாரிப்பே ஆகும்.

வாயிலிருந்து சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கின்றது: கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட்டினால் ஒழுங்காகவும், முக்கியமாக சாப்பிட்டவுடனேயும் பல் துலக்கி, ஈறுகளில் ஒட்டிக்கொண்டிருக்கும் உணவுத் துணுக்குகளையும் கிருமிகளையும் நீக்கி, பற்கள் சொத்தை யாகாமல் தடுங்கள்.

வாயின் துர்நாற்றத்தை அதிதீவிரமாக ஒழிக்கின்றது: வாய் துர்நாற்ற மடைந்தவர்களை "ஆஸ்மோஸ்கோப்" சோதனை மூலம் பரிசோதித்ததில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறு எந்த சாதாரண டூத் பேஸ்ட்டையும் விட மிகவும் தீவிரமாக வாயின் துர்நாற்றத்தை ஒழித்து, வெளிவிடும் சுவாசத்தை புதுப்பித்து சுத்தமாக்குகிறது என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது.

வேறு எந்த டூத் பேஸ்ட்டிலும் இதை விட அதிக வீரிய குளோரோபில் இல்லை. குழந்தைகள் அதன் இனிய பெப்பர்மிண்ட் வாசனையை விரும்புகின்றனர்.




பணத்தை மிச்சப்படுத்துங்கள்— பெரிய எகானமி சைஸை வாங்குங்கள்!

CTPA. G. 11 TAM



# கர்நாடக சங்கீதத்தில் புதிய பாணிகள்

சமீப காலத்தில் சில சங்கீத அப்பியாஸகர்கள் தங்கள் இசைத் தொண்டில் பல புதுமைகளைக் கையாள முன்வந்திருக்கிறார்கள். பழக்கத்தில் இல்லாத அபூர்வ ராகங்கள், புதிய கிருதிகள், துணிச்சலான மனோதர்மம் எல்லாம் சேர்ந்து ரசிகர்களில் பலப்பலரை மெய்மறக்கச் செய்கின்றன. அதே சமயத்தில் இந்த வழி சம்பிரதாய வழியை ஒட்டியதா? இந்த ராகங்களெல்லாமே ஏதோ புது மாதிரியாக இருக்கின்றனவே! கர்நாடக ராகங்கள்தானா? என்ற ஐயப்பாடும் கூடவே எழுகின்றன. புரியாத அபூர்வ ராகங்களாக இருந்தால் அது பாடகரின் திறமையைத்தான் காட்டுகிறது என்று நினைக்கும் ஓசை வசிய ரசிகர்களும் இந்த முறை பழமையைப் பழிக்கும் வகையிலே அமைகிறதே என்று சிந்திக்கும் விஷயம் தெரிந்த விமர்சகர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். கர்நாடக இசையின் கம்பீரத்தையும் கனத்தையும் குறைக்கும் இந்த லகு சஞ்சார முறையைத் தீவிரமாக எதிர்ப்பவர்களும் உண்டு.

இன்றைய இந்தப் புது வழிகளைக் கர்நாடக இசை ஏற்றுக்கொள்ளுகிறதா இல்லையா என்று தெரிந்து கொள்ள விரும்பினோம். அதற்குக் கர்நாடக இசைத் துறையில் நிறைய நிறைய அனுபவம் பெற்ற திரு முசிரி சுப்பிரமணிய ஐயரை அணுகினோம். புதுமையைப் பழமையுடன் பாரம்பரியமாக இணைத்துப் பழக்கப்பட்ட திரு முசிரி இந்தப் பிரச்னைகளைப் பற்றிய கேள்விகளுக்கு உற்சாகமாகவே பதில் அளித்தார்.

''இப்போதெல்லாம் கர்நாடக இசையின் சம்பிரதாயத்துக்கு மாறுபட்ட புதுப் பாணி ஒன்று நடைமுறையில் வந்திருப்பதாகச் சொல்கிறார்களே! உங்கள் கருத்து என்ன?''

''புதுமை, புதுமைக்கான முயற்சி என்பதெல்லாம் கர்நாடக சங்கீதத் துறையில் எப்போதுமே இருந்து கொண்டு வருவதுதான். புதிது இல்லை. கோனேரிராஜபுரம் வைத்தியநாதய்யர், தீட்சிதர், எல்லாருமே புது முயற்சி பண்ணினவர்கள்தான்! ஆனால் அவர்கள் சம்பிரதாயத்துக்கு மாறுபட்டு எதையும் செய்யவில்லை. ஒட்டியேதான் செய்தார்கள். அதற்கும் ஓரளவு எதிர்ப்பு இருந்தது. நாளடைவில் மறைந்து விட்டது. இப்போதைய புதுமை சம்பிரதாயத்துக்குச் சம்பந்தப்படாதது என்று நினைக்கிறேன்.''

''சம்பிரதாயத்துக்குச் சம்பந்தப்படாமல் புதுமையையோ மாறுதலையோ தோற்றுவிக்க முடியுமா?''

''ஏன், முடியாது? உதாரணத்துக்கு நம்முடைய கோவில் குளங்களையே எடுத்துக் கொள்வோமே! பழைய பந்தாவிலே, நடுவிலே ஸ்வாமி, பக்கத்திலே அம்பாள், பிராகாரங்களிலே தெற்குப் பார்க்கத் தட்சிணாமூர்த்தி, ஒரு பக்கமாகச் சனீசுவரன் என்று சன்னதிகளை அமைத்திருக்கிறார்கள். புதுமை பண்ணிப் பார்ப்போமே என்று சனீசுவரனைக் கொண்டு போய் மத்தியில் நிறுத்தி, ஸ்வாமியைத் தூக்கி ஒரு பிராகார மூலையில் பிரதிஷ்டை செய்து தட்சிணாமூர்த்தியை மேற்குப் பார்க்க உட்கார்த்தி யாரும் கோவில் புதிதாக எழுப்பினால் அதுவும் புதுமைதானே! சம்பிரதாயத்துக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? நாம் வணங்குகிறாற் போலே எத்தனையோ தெய்வங்கள் புராண, இதிகாச அளவிலே உண்டு. ஆனால் எல்லோரையும் நாம் கோவிலிலே கொண்டு வந்து வரிசையாக நிறுத்திப் பூசிப்பதில்லையே! அதுபோல் கர்நாடக இசையிலே எழுபத்திரண்டு மேளகர்த்தா ராகங்கள் உண்டு. ஆனால் சில குறிப்பிட்ட ராகங்களைத்தான் விஸ்தாரமாகக் கையாளுவது ஒரு மரபாக வந்துவிட்டது. நமது முன்னோர்கள் அந்த ராகங்களைப் பாடிப் பாடி அவைகளுக்கு ஒரு வகையான நிரந்தர உருவங்களைக் கொடுத்து விட்டார்கள். தோடி என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும்; கல்யாணி என்றால் இந்த ரீதியில் தான் இருக்கும் என்று அத்துபடியாகிவிட்டது. இது சங்கராபரணம்தானா என்று சந்தேகிக்கும் அளவுக்கோ, அல்லது கச்சேரி முடிந்து எழுந்து வரும் வரையில் என்ன ராகத்தில் குறிப்பிட்ட கீர்த்தனை பாடப்பட்டது என்று தெரிந்து கொள்ள முடியாத அளவுக்கோ பாடுவது என்று வந்துவிட்டால்,

அப்புறம் சங்கீதத்திலே ஒரு கணக்கு வழக்கு வரையறைக்கு இடம் ஏது?''

''அபூர்வ ராகங்களைக் கையாளுவதிலே தப்பு ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லையே. தியாகையரே நூற்றி ஐம்பதிலிருந்து இருநூறு வரையிலான அபூர்வ ராகங்களிலே கிருதிகள் அமைத்திருக்கிறாரே!''

''அபூர்வ ராகங்களைக் கையாளுவதில் தப்பு இருக்கிறது என்று நான் சொல்லவில்லை. அபூர்வ ராகங்களை அபூர்வமாகக் கையாண்டால்தான் ராகத்துக்கும் மதிப்பு. கையாளுபவர்களுக்கும் மதிப்பு. ஒரு சாதாரண அகராதியிலே பத்தாயிரத்துக்கு மேலான வார்த்தைகளைக் கொடுத்து அதற்கு அர்த்தமும் கொடுத்திருக்கிறான். நாம் நடைமுறையிலே அத்தனை வார்த்தைகளையுமா பேச்சு வழக்கில் அமுலுக்குக் கொண்டு வருகிறோம்? சில நூறு வார்த்தைகள் நடைமுறையிலிருக்கின்றன. பேச்சில் பயன்படுத்துகிறோம். மெனக்கெட்டு ஒருவன் வழக்கத்தில் இல்லாத வார்த்தைகளாகப் பொறுக்கி அவைகளைப் பிரயோகித்துப் பேசினால் கேட்பவர்களுக்கு என்ன புரியும்? பிரமாதமாக இங்கிலீஷ் பேசுகிறார் என்று சொல்லலாமே தவிர என்ன பேசினார் என்று எளிதில் சொல்லிவிட முடியுமா? அபூர்வ ராகங்களுக்கு ஒரேயடியாக முக்கியத்துவம் கொடுப்பது இப்படி இங்கிலீஷ் பேசுவது போல்தான் இருக்கும். கொஞ்சம் இங்கிலீஷ் தெரிந்தவர்கள் இதென்ன இப்படிப் பேசுகிறானே என்று விழிப்பார்கள். ஒன்றுமே தெரியாதவர்கள், 'ஆஹா! அற்புதம்! இது ரொம்ப உயர்ந்த ரகமாகத்தான் இருக்கணும்' என்று தலையை ஆட்டி விடுகிறார்கள். ரசனையின் அளவாக இதைக் கொண்டுவிட முடியுமா? இதைப் புரியாத புகழ்ச்சி என்று சொல்லலாமல்லவா?''

''ஏற்கனவே கேட்டுக் கேட்டுப் பழகிய ராகங்களைவிட, பழக்கத்திலில்லாத புதிய ராகங்கள் கேட்பவர்களுக்குப் புத்துணர்ச்சியை ஊட்டலாம் அல்லவா?''

''ஒப்புக் கொள்கிறேன். விருந்து என்றால் அண்டா நிறைய பாயசத்தை மாத்திரம் வைத்து இதுதான் விருந்து என்றால் என்ன சொல்லுவீர்கள்? அந்த நாட்களில் குந்தளவராளி, சுத்தசாவேரி முதலிய ராகங்களே ஓரளவு அபூர்வ ராகங்களாகத்தான் இருந்தன. மதுரை புஷ்பவனம் ஐயர் அவைகளைப் பாட ஆரம்பித்தார். ஏற்கனவே தியாகையர் அந்த ராகங்களில் கீர்த்தனைகளைக் கவனம் செய்திருந்தது அவருக்கு உதவியாக இருந்தது. ஆனால் இப்போதுதான் ராகங்கள் எத்தனை புதுமையாக இருக்கின்றனவோ அத்தனை புதுமையாகச் சாகித்தியங்களும் இருக்கின்றனவே! புதிய ராகத்தில் பழைய கீர்த்தனையையும் பழைய ராகத்தில் புதிய கீர்த்தனையையும் அப்பியசிக்கும்போது ஒன்றுக்கொன்று வலுவைக் கொடுக்கின்றது. மற்ற உணவு வகைகளுடன் பாயசத்தையும் பரிமாறுவது போல!''

''பிறகு புதிய ராகங்களை எப்படித்தான் உருவாக்குவது? ஜனரஞ்சகமாக்குவது?''

''நல்ல கேள்விதான். எனக்கு ஆதி சங்கரர் அவர் சிஷ்யர்களுடன் யாத்திரை கிளம்பிய கதை நினைவுக்கு வருகிறது. சங்கரர் சிஷ்யர்களுடன் நடந்து கொண்டிருந்த பாதையில் ஒருவன் மரத்திலிருந்து கள் இறக்கிக் கொண்டிருந்தான். சங்கரர் அவன் முன் நின்று கையை நீட்டினார். கள் இறக்குபவன் பக்தியுடன் ஒரு கலயம் கள்ளை நீட்டினான். சங்கரர் அதை வாங்கி அருந்தி விட்டு நடந்தார். சிஷ்யர்களுக்குச் சபலம். குருவே அருந்தும்போது தாங்களும் அருந்தினால் என்ன என்ற எண்ணம். ஆளுக்கு ஒரு கலயம் வாங்கிக் குடித்து விட்டு சங்கரரைப் பின்தொடர்ந்தார்கள். இதைக் கவனிக்காதவர்போல் சங்கரர் முன்நடந்தார். கொஞ்ச தூரம் போனவுடன் ஓரிடத்தில் ஓர் இரும்புப் பட்டறையில் இரும்பை உருக்கிக் குழம்பாக ஊற்றிக் கொண்டிருந்தார்கள். சங்கரர் ஒரு குவளையில் அந்தக் கொதிக்கும் இரும்புக் குழம்பு வேண்டுமென்று கேட்டார். அதை வாங்கி மடமடவென்று குடித்தார். திகைத்து நின்ற சிஷ்யர்கள் பக்கம் கையைக் காட்டி அவர்களுக்கும் ஒரு குவளை கொடுக்கச் சொன்னார். பக்குவமடையாத சிஷ்யர்கள் அப்போதுதான் தங்கள் தவறை உணர்ந்தார்கள். குரு செய்வதையெல்லாம் தாங்கள் செய்ய முடியாது என்பதையும் அதைச் சுட்டிக்காட்டவே அவர் இந்த இரண்டு சம்பவங்களையும் நிகழ்த்தினார் என்பதையும் புரிந்து கொண்டார்கள். அப்புறம் அவர்கள் மனோபக்குவம் அடைந்தார்கள். கலையிலும், ஓரளவு இந்தப் பக்குவ நிலையையும் முழுமையான தேர்ச்சியையும் பெற்றவர்கள் அவ்வப்போது புதிய கற்பனைகள் செய்கிறார்கள். தீட்சிதர் நான்கு புது ராகங்களைத்தான் தோற்றுவித்தார். சியாமா சாஸ்திரி இரண்டு புது ராகங்களைத்தான் தோற்றுவித்தார்.''

''புரிகிறது. மகா மேதைகளான க்ஷேத்ரக்ஞர், புரந்தரதாஸர் முதலியவர்கள் இயற்றிப் பாடிய அற்புத சாகித்தியங்களையே மரபு வழியான கனத்துக்கு மாறுபட்டதாகக் கருதி அந்நாளைய சங்கீத உபாசகர்கள் சபைகளில் ஏற்றுக் கொள்ள மறுத்தார்கள் என்பதாகக் கேள்விப் படுகிறோமே! ....''

''எதிலும் புதுமைக்கு வழி உண்டு. இடம் உண்டு. ஆனால் அந்தப் புதுமை சம்பிரதாயத்தின் அஸ்திவாரத்தில் எழுந்ததாக இருக்க வேண்டும். அனைவராலும் ஒப்புக் கொள்ளக்கூடிய தகுதி, முதிர்ந்த அனுபவம், பயிற்சி இவற்றுக்குப் பின் உருவானதாக இருக்க வேண்டும்.''

''முடிவாக?''

''புதுமைகளைப் புகுத்த யாருக்கும் சுதந்திரம், உரிமை உண்டு. ஆனால் இந்தப் புதுமை வேறு, மரபு வழி வந்த கர்நாடக இசை வேறு என்று தனித் தனியாக இருந்து விட்டுப் போகலாமே!''

— மேனு






# சாகசத்துக்கு என்ன விலை?



டெக்ஸ் வில்சனுக்கு அறுபத்தி ஐந்து வயதாகி விட்டது. நாற்பது வருஷங்களாகப் பக்கத்து நகரிலிருந்து வெளியான பல பத்திரிகைகளில் பல துறைகளில் வேலை பார்த்த அனுபவத்தை மறந்து விலக்கிவிட்டுச் சும்மா உட்கார்ந்திருக்க டெக்ஸ் வில்சன் விரும்பவில்லை. கிராமத்திலேயே சொந்தத்தில் பத்திரிகை நடத்தும் நோக்கத்துடன் கையிலிருந்த பணத்தை முடக்கினார். டெக்ஸ் வில்சனின் வாரச் செய்திப் பத்திரிகை வெளிவரத் தொடங்கியது.

ஒதுங்கி வாழ்ந்த அந்த ஊர் ஜனங்கள் எல்லாருக்கும் டெக்ஸ் மேல் அலாதி மதிப்பு. அன்பு. டெக்ஸ்தான் அந்தப் பத்திரிகையின் ஆசிரியர், நிருபர், நிர்வாகி எல்லாம்!

பத்திரிகை ஆரம்பித்த மறு ஆண்டில் அந்த வாரச் செய்திப் பத்திரிகை இதழ் ஒன்றில் இரண்டாவது பத்தி காலியாக எழுத்தே இல்லாமல் வெளி வந்தது. இதைத் தொடர்ந்து ஆண்டுக்கு இரண்டு முறையாவது அந்த மாதிரி காலி பத்திகள் பத்-

திரிகை இதழ்களில் வெளியாயின. ஒரு தடவை முதல் பக்கத்திலேயே கூடவந்தது.

ஏன் இப்படி டெக்ஸ் வில்சன் பத்தியை நிரப்பாமல் காலியாக விடுகிறார் என்று வாசகர்களுக்குப் புரியவில்லை. அதைப் பற்றி அவர்களுக்குள் ஆராய்ச்சியும் சர்ச்சையும் செய்யத் தொடங்கினார்கள். இந்தச் சர்ச்சை பற்றிய விஷயம் டெக்ஸ் செவிகளிலும் விழுந்தது. "ஓர் ஆசிரியர் தாம் நடத்தும் பத்திரிகையில் ஒவ்வொரு பத்தியையும் அவசியம் பூர்த்தி செய்துதானாக வேண்டும் என்ற சட்டம் ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லையே?" என்று டெக்ஸ் அலட்சியமாகச் சொல்லி விட்டார். ஏன்! அவருடைய பத்திரிகைக்கு அச்சுக் கோக்கும் ஒரே சிப்பந்தியான வால்ட் நீஸலுக்குக்கூட டெக்ஸின் விசித்திரப் போக்கும் வாதமும் புரியவில்லை; தெரியவில்லை.

ஒரு நாள் டெக்ஸ், வால்ட் நீஸலுடன் தம் காரியாலயத்தில் பேசிக் கொண்டிருந்த போது ஓர் இளைஞன் ஆத்திரத்துடன் நுழைந்து டெக்ஸ் முன்னால் நின்றான். அவன் முகத்தில் கோபமும் வெறியும் ததும்பி நின்றன. "ஐயா! உம்மை ஒரு பைத்தியக்காரன் என்று இந்த ஊர்க்காரர்கள் கேலியாகப் பேசுகிறார்கள். என்னால் இதைப் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது. உங்கள் பத்திரிகையில் ஏன் காலிப் பத்திகள் வருகின்றன என்று நான் சொல்லிவிடப் போகிறேன்" என்றான் பதற்றத்துடன்.

டெக்ஸ் அலட்சியமாகச் சிரித்தார். "ஊரார் என்ன பேசினால் என்ன? உனக்கும் எனக்கும் தெரியும், நான் பைத்தியக்காரனில்லை என்று! காலிப் பத்திகளைப் பற்றி எல்லோருக்கும் விளக்கம் கொடுக்க வேண்டும் என்ற அவசியமில்லை" என்று அனுப்பி வைத்தார். வால்ட் நீஸல்கூட விவரம் புரியாமல் விழித்தான்.

நாளடைவில் இந்தக் காலி இடத்தைப் பற்றிய பேச்சு ஜனங்களிடையே வேறு வழியில் திரும்பியது.

டெக்ஸ், சிலருடைய அந்தரங்க விஷயங்களைத் தெரிந்து வைத்துக்கொண்டு அவர்களைப் பயமுறுத்திப் பணம் பிடுங்க இந்த உத்தியைக் கையாளுகிறார் என்ற வதந்தி பரவத் தொடங்கியது. அந்தக் காலிப் பத்தியில், ஒழுங்காகப் பணம் வராவிடில், அவர்களுடைய ரகசியம் வெளியாகும் என்று அவர் எச்சரிக்கிறார் என்றும் பேசத் தொடங்கினார்கள். டெக்ஸ் செவிகளுக்கும் இந்த வம்புப் பேச்சு எட்டியது.

"என்னை நன்கு புரிந்து கொண்டவர்கள் இந்த வதந்திகளை நம்ப மாட்டார்கள் என்று எனக்குத் தெரியும். நான் ஏதோ ஒரு நோக்கத்துடன் அவ்வப்போது காலிப் பத்திகளை வெளியிட்டேன். அந்த நோக்கம் இத்தகைய வதந்திகளுக்கு இடம் கொடுக்குமென்று நான் நினைக்கவில்லை. இப்போதும் நான் ஏதும் விளக்கம் கொடுக்க வேண்டியது அவசியம் என்று நினைக்கவில்லை" என்று சாந்தமாகச் சொல்லி விட்டுத் தம் அலுவல்களில் ஈடுபட்டார் டெக்ஸ்.

டெக்ஸைப் பற்றிய வம்புப் பேச்சு என்னவோ தொடர்ந்து வளர்ந்து கொண்டு தானிருந்தது!

தன் மனைவி மாலி இறந்து விட்டதன் காரணமாகப் பல நாட்கள் வெளியே வராமல் வீட்டிலேயே இருந்த பீட் மோடி என்னும் கிழவன் அன்றுதான் சாமான்கள் வாங்க மளிகைக் கடைக்கு வந்திருந்தான். வந்த இடத்தில் டெக்ஸைப் பற்றிக் கேலியாகப் பேசும் வார்த்தைகள் அவன் காதில் விழுந்தன. அவ்வளவுதான் கோபத்தில் சீறி விழுந்தான்.

"அற்பத்தனமாகப் பேசாதீர்கள்! டெக்ஸ் ஒரு நாளும் ரகசியங்களை வெளியிடாமலிருக்கப் பணம் வாங்குபவரில்லை. அதற்காக அவர் காலிப் பத்திகளைக் காண்பித்து எச்சரிக்கை செய்யவுமில்லை. அவருடைய விசாலமான இதயம், பரந்த மனோபாவம், சாந்தமான சிந்தனை இவைகளின் உருவமே அந்தக் காலிப் பத்திகள். அதற்கு விலை மதிப்பே கிடையாதே! நானே அந்த வாரப் பத்திரிகையில் வந்த ஒரு காலிப் பத்திக்குப் பொறுப்பு! உங்களுக்குத் தெரியுமா?" என்று பீட்மோடி உணர்ச்சி வசப்பட்டுக் கூவினான். இத்தனை நாட்கள் ஜனங்களுக்குப் புரியாமல் இருந்த புதிரையும் அவன் அவிழ்த்தான்.

**பீ**ட்மோடி எழுபதாவது வயதை நெருங்கிக் கொண்டிருந்தான். இயந்திரக் கருவிகள் விற்கும் கடை ஒன்றில் அவன் ஒரு சிப்பந்தி. சீக்கிரமே அவன் ஓய்வு பெற்றுக் கொள்ள வேண்டிய நிலையில் இருந்தான். சேமிப்புப் பணமெல்லாம் ஏற்கனவே தன் ஒரே மகளைக் கல்யாணம் செய்து கொடுத்து அனுப்பியதில் செலவழிந்து போயிற்று. ஓய்வு பெற்றதும் என்ன செய்வது என்பது பெரிய பிரச்னையாக இருந்தது அவனுக்கு. அவனும் அவன் மனைவி மாலியும் பெண் வீட்டில் போய் உட்கார முடியாது. அங்கேயே பெரிய குடும்பம். இந்தக் கட்டத்தில் தான் பீட்மோடி அற்ப ஆசைக்கும் சபலத்துக்கும் ஆளானான். தான் வேலை பார்த்த ஸ்தாபனத்திலிருந்து அவ்வப்போது யந்திரக் கருவியின் பாகங்களைத் திருடி வெளியே ரகசியமாக விற்கத் தொடங்கினான். ஒரு நாள் கடை முதலாளி அவனைக் கையும் களவுமாகப் பிடித்துவிட்டார். போலீசுக்குத் தகவலும் கொடுத்து விட்டார்.

இந்தத் தகவல் போலீசுக்கு வந்தபோது தம் பத்திரிகைக்குச் செய்திகள் சேகரிப்பதற்காக டெக்ஸ் அங்கு வந்திருந்தார். அவரும் போலீஸ்காரருடன் புகார் வந்த இடத்துக்குப் புறப்பட்டார்.

போலீசைக் கண்டவுடன் பீட்மோடி கதிகலங்கி விட்டான். நாத் தழுதழுக்கத் தான் திருடி வந்ததை ஒப்புக் கொண்டு விட்டான். டெக்ஸ் இதைக் கவனித்துக் கொண்டிருந்தார். பிறகு அவர், கடை முதலாளியையும் போலீஸ்காரரையும் பக்கத்து அறைக்கு அழைத்துப் போய்ச் சிறிது நேரம் பேசி விட்டுப் பிறகு தாம் மாத்திரம் பீட்மோடியிடம் வந்தார். "மோடி! நீ செய்த குற்றம் மன்னிக்க முடியாதது. நீ கொஞ்சம்

கூட உன் குடும்பத்துக்கு ஏற்படும் கெட்ட பெயரைப் பற்றி நினைத்துப் பார்க்கவில்லை. இந்தத் திருட்டுச் செய்தி பத்திரிகையில் வெளியானால் உன் மனைவி மாலி மன முடைந்து போவாள். இந்த ஊரின் சமூக சேவையில் அவள் மிக ஆர்வம் காட்டி உழைப்பவள். எல்லாருக்கும் உபகாரம் செய்யும் ஆசை உள்ளவள். அவள் மனம் நொந்து போகக் கூடாது என்ற எண்ணத்தில் உன்னை இந்த இக்கட்டிலிருந்து காப்பாற்ற நினைக்கிறேன். நீ இது வரை திருடி விற்றுவந்த பண்டங்களின் கிரயத்தைக் கடை முதலாளியிடம் திருப்பிக் கொடுக்க வேண்டும். உன்னை அவர் தொடர்ந்து வேலைக்கு வைத்துக் கொள்வார்.

''உன் குடும்பப் பொருளாதாரம் உயர உன் மனைவி மாலி, வீட்டிலேயே தின் பண்டங்கள் தயாரித்து விற்கட்டும். அதற்கு என் பத்திரிகை உதவி செய்யும். இந்தத் திருட்டுச் செய்தி வழக்கமாகப் பத்திரிகையில் வெளியாகும் இடத்தை நான் காலியாகவே விட்டு வைத்திருப்பேன். அது உனக்கு எச்சரிக்கையாக இருக்கும். நீ இந்தத் தவறை மீண்டும் செய்தால் நான் அந்தப் பழைய செய்தியைப் போட்டுவிடுவேன்'' என்றார் டெக்ஸ்.

பீட்மோடிக்கு நன்றி தெரிவிக்க வார்த்தைகள் அகப்படவில்லை. அவன் தொடர்ந்து ஒழுங்காக வேலை செய்தான். அவன் மனைவி மாலிக்கும் மற்றவர்களுக்கும் இந்த விஷயம் தெரியாமலே இருந்து விட்டது. பீட்மோடி தலை நிமிர்ந்து நடக்க முடிந்தது.

இந்த நிகழ்ச்சியைப் பீட்மோடி வெளி விட்டதும் ஊராருக்கு டெக்ஸிடம் அபார மதிப்பு ஏற்பட்டது. குழந்தை குட்டிகள் குடும்பம் இல்லாத டெக்ஸ் வில்சன், அந்த ஊரையே தன் குடும்பம் என்று நினைத்து அவர்களில் பலரின் குடும்ப கௌரவத்தை விலை மதிப்பில்லாச் சாந்தத்துடன் காப்பாற்ற முற்பட்டார் என்று தெரிந்த போது ஊர்க்காரர்கள் தங்கள் வம்புப் பேச்சுக்காக மிகவும் வருத்தப்பட்டார்கள்.

டெக்ஸின் வாழ்நாளில் பதினொரு சந்தர்ப்பங்களில் அவர் பத்திரிகையில் காலிப் பத்திகள் வெளியாயின. அவைகளில் மூன்று சம்பவங்களைத்தான் (மோடி புரிந்த குற்றம் உள்பட) தெரிந்து கொள்ள முடிந்தது.

—கோமதி ஸ்வாமிநாதன்

ஆதாரம்: ரீடர்ஸ் டைஜஸ்ட்




## ரேடியோ மாமா!



காலை பத்து மணியிலிருந்து மாலை நான்கு மணி வரை பாடிக் கொண்டிருந்தது வானொலிப் பெட்டி. ரேடியோவை அணைக்கப் போன நான் பிரேம் குமாரின் குரல் கேட்டுத் திரும்பினேன்.

'மாமா! ரேடியோவைஆஃப் செய்யாதே. 'சிலோன்' வை. இன்னும் சிறிது சினிமாப் பாட்டுக் கேட்கலாம்' என்றான்.

வானொலிப் பெட்டி மிகவும் உஷ்ணமாக இருந்ததாலும் எனக்கு வேறு வேலை இருந்ததாலும்,



அவனைச் சமாதானப்படுத்த முற்பட்டேன். சமாதானம் செய்யா விட்டால்தான் என் வீட்டுப் பொருள்களுக்கெல்லாம் இறக்கை முளைத்துவிடுமே!

'டேய் குமார், அந்த ரேடியோப் பெட்டிக்குள் ஒரு மாமா இருக்கார். அவர் இன்று பத்திலிருந்து நான்கு மணிவரை பாடியிருப்பதால் தொண்டை கட்டிவிட்டது. அவரால் இன்றைக்கு இனிமேல் பாட முடியாது. இதோ பார், சுரம் கூட அடிக்கிறது!' என்று அவன் கரங்களைப் பிடித்துச் சூடாகியிருந்த ரேடியோவின் மேல் வைத்தேன்.

அன்று மாலை ஆறு மணிக்கு வீடு திரும்பிய நான் கண்ட காட்சி! - வானொலிப் பெட்டி இருக்கும் மேஜையின் அருகில் உள்ள நாற்காலியில் நின்று, ஒரு கையில் தான் பால் அருந்தும் புட்டி நிறையத் தண்ணீரை வைத்துக் கொண்டு, தட்டுத் தடுமாறி ரேடியோப் பெட்டியின் பின்புறமுள்ள சிறுசிறு துவாரத்தின் வழியாகத் தண்ணீரை ஊற்றிக் கொண்டிருந்தான் அந்த வாண்டுப் பயல்!

'என்னடா....'—என் குரல் கேட்டுத் திரும்பியவன், 'என்ன மாமா நீதானே நேற்றுக் கூறினாய்! ரேடியோவில் உள்ள மாமாவுக்குத் தொண்டை கட்டி ஜுரம் அடிக்கிறது என்று. சுரத்தைப் போக்க மாத்திரை தருகிறேன்!' என்று தன் கையிலிருந்த ஜுர வில்லை இரண்டைக் காண்பித்தான்.

வானொலிப் பெட்டி கெட்டுவிட்டது என்ற கோபத்தை அவன் கூறிய பதில் தணிவச் செய்தது.

மு. கணேசன், கீழ் ஆம்பூர்



1. அமெரிக்க உதவி ஜனாதிபதி ஹூபர்ட் ஹம்ப்ரி பஞ்சாப் ஹிஸார் விவசாயக் கல்லூரிக்கு விஜயம் செய்து கோதுமைப் பயிரைப் பார்வையிடுகிறார். 2. தியாகராயநகர் கிருஷ்ண கான சபையினர் தியாகராஜ உற்சவத்தைக் கொண்டாடினர். இந்த வைபவத்தில் கலந்து கொண்டவர்களில் சிலரைப் படத்தில் காணலாம். பாடகர்கள்: ராமநாதபுரம் கிருஷ்ணன், தியாகராஜன், பி.



ராஜமய்யர், கிருஷ்ணமூர்த்தி ராவ், கோவிந்த ராவ். பிடில் வித்வான்கள்: கண்டதேவி அழகிரிசாமி, லால்குடி ஜயராமன், தியாகராஜன், கோபால கிருஷ்ணன், அனந்தராமன். 3. குமாரி பிரியம்வதா ராகவன் ஸ்ரீமதி பால சரஸ்வதியின் சிஷ்யை. மத்திய அரசாங்கத்தின் அழைப்புக் கிணங்கிப் பரதநாட்டியக் கச்சேரிகள் செய்ய நேபாளம் சென்றிருக்கிறார். 4. மதுரைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் திரு தெ. பொ. மீனாட்சி சுந்தரனாருக்குத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர் நடத்திய பாராட்டு விழாவில் அகிலன், ஏ.ஜி. வேங்கடாச்சாரி, தெ.பொ. மீ., அழ. வள்ளியப்பா ஆகியோர்.











# தென்னாட்டின் தொழில் வளர்ச்சியில் மற்றுமொரு சாதனை!





EP.AS.I



உள்நாட்டு உபயோகம், வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி ஆகியவற்றிலுள்ள பற்றுக்குறையைத் தீர்க்க தென்னற்காடு ஜில்லா, விருத்தாசலம் தாலுகாவிலுள்ள பெண்ணாடத்தில் ஒரு சர்க்கரை ஆலையை நிறுவியுள்ளோம். 9-3-66 அன்று **சென்னை தொழிலமைச்சர் கனம் ஸ்ரீ R. வெங்கட்ராமன்** அவர்கள் இந்த ஆலையைத் திறந்து வைத்தார். விழாவிற்கு **சென்னை முதலமைச்சர் கனம் ஸ்ரீ M. பக்தவத்சலம்** அவர்கள் தலைமை வகித்தார்.

இந்த ஆலையில் நாள் ஒன்றுக்கு 1200 டன் கரும்பைப் பிழிந்து சுமார் 1100 மூட்டைகள் சர்க்கரை தயார் செய்ய முடியும்.






## அருணா ஷுகர்ஸ் லிமிடெட்

ரிஜிஸ்டர்ட் அலுவலகம்:
**"தன் பில்டிங்", 175/1, மவுண்ட் ரோடு, சென்னை-2**

தலைவர்: C. S. லோகநாதன்
நிர்வாக டைரக்டர்: P. மருதைப் பிள்ளை











# ரேடியோ நாடக விழா

டிசம்பர் மாதம் சங்கீத ஸீஸன் என்றாகி விட்டது போல் பிப்ரவரி மாதம் நாடக ஸீஸன் என்றாகி விட்டது. சென்னை ரேடியோ நிலையத்திலிருந்து நான்கு நாடகங்களும், திருச்சி ரேடியோ நிலையத்திலிருந்து நான்கு நாடகங்களும் ஒலிபரப்பாயின.

## கயல்விழி

சென்னை ரேடியோ நிலையத்தில் முதன் முதலாகச் சரித்திர நாடகம் 'கயல்விழி' ஒலிபரப்பாகியது. 'கயல் விழி'யைக் கல்கி வாசகர்கள் தொடர்கதையாகப் படித்தவர்கள் இப்பொழுது நாடக உருவில் கேட்டார்கள். நீண்ட தொடர்கதையை ஒரு மணி நேரத்தில் தொடர்பு அற்றுப் போகாமல் சுவையாகத் தர முடியுமா என்ற ஐயத்தைப் போக்கி, நீண்ட தொடர்கதையின் சுவையனைத்தையும் குறுக்கித் தரித்துத் தந்த அகிலனை அனைவரும் பாராட்டியிருப்பார்கள். படித்த கதையானாலும் கேட்டு ரஸித்து மகிழத் தக்கதாக அமைந்திருந்தது. 'கயல் விழி'யாக வந்த ஹேமலதா நாடகத்தின் சிறப்புக்கு உறுதுணையாயிருந்தார்.

பாண்டிய இளவரசன் சுந்தரபாண்டியனும், கன்னட அரசன் வீரநரசிம்மனும் பொருதத் தயாராயிருக்கும் போது கயல் விழி தன்னைக் களப் பலி கொடுத்துப் போருக்குத் திருப்பம் தந்த காட்சி சிகரமாக அமைந்திருந்தது.

இந்த நாடகத்தில் பங்கு கொண்ட அனைவருமே தத்தம் பாத்திரத்தைச் செம்மையாகச் செய்தனர். சுந்தரபாண்டியனாக பி. டி. ரட்சகனும், பாமினியாகப் பானுமதியும், குலசேகரப் பாண்டியராக டி. கே. சண்முகமும், விழுப்பரையராகப் பாலசுப்பிரமணியமும் வந்து நாடகத்தின் வெற்றிக்குப் பெருந் துணை செய்தார்கள். 'கயல் விழி' சரித்திர நாடகம் கேட்டு மகிழ்ந்த நாடகங்களில் ஒன்றாகும்.

## பாசத் திரை

வாழ்க்கையில் ஏற்படும் சின்னஞ்சிறு மாறுதல் ஒரு பெரும் பிரச்னையாக உரு வெடுத்துப் பலவித சிக்கல்களைத் தோற்று வித்து விடுகின்றது. கிராமத்தில் வாழும் மாலதியின் வாழ்க்கையிலும் அவளது பிறப்பு மர்மம் அவள் தனது கணவனைச் சேரவொட் டாது தடுக்கிறது. இச் சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொள்ள முனைகிறான் அவளது துஷ்ட மாமா. திக்கற்றவளுக்குச் சமயத்தில் உதவச் சம்பத் வந்து, கயவனிடமிருந்து அவளைக் காப்பாற்றுகிறான். முன்பின் அறியாத அவளைத் தன் சகோதரியாகக் கொள்கிறான். அவளைக் கணவனோடு சேர்த்து வைக்கப் பெரிதும் முயல்கிறான். இங்கேயும் சிக்க லுக்கான முடிச்சு விழுகிறது. இதனால் சம்பத்துக்கும் முறைப் பெண் சாந்தாவுக்கும் நடக்கவிருந்த கல்யாணத்தில் முறிவு ஏற்படு கிறது. கடைசியில் பாசத் திரை விலகுகிறது. சம்பத்தின் தந்தையே மாலதியின் தந்தை என்பது வெளியாகி, மாலதி தன் கணவனைச் சேருகிறாள். சம்பத் சாந்தாவின் கரம் பற்று கிறான். பிரிந்தவர் ஒன்று கூடுகின்றனர்.

மாலதியின் பாத்திரத்தை ஏற்ற லீலா மகாதேவனும், சாந்தியின் பாகத்தை ஏற்ற நடிகை எம். என். ராஜமும், சம்பத் கதா பாத்திரமான எம். என். கண்ணப்பாவும் இந்தச் சமூக நாடகம் திறம்படத் திகழ்வ தற்குக் காரணமானவர்கள். குடும்ப வாழ்வின் சிக்கலையும் நெருடலையும், கிராமச் சூழ்நிலை யையும் இந்த நாடகத்தில் நன்கு சித்திரித் திருப்பதைக் காணலாம். ''பாசத் திரை'' ரஸிகர்கள் மனங் கவர்ந்த மற்றொரு நாடகம்.

## நீ முதல்வன் !

ஆங்கிலத்தில் 'ஸடையர்' என்று சொல்லப் படும் நையாண்டி இலக்கிய உத்தியைக் கையாண்டு தயாரிக்கப்பட்ட நாடகம் 'நீ முதல்வன்!'

வாழ்க்கையில் புரையோடிவிட்ட அநாக ரிகங்களை எள்ளிநகையாடுவது இந்த உத்தியி னால் இயலும். இந்த உத்தியைச் சிறப்பாகக் கையாள்வதிலே பெர்னார்ட் ஷாவின் பெருமையை எல்லாரும் அறிவார்கள்.

அந்த அளவுக்கு இல்லையென்றாலும் 'நீ முதல்வன்' நாடகத்தில் 'ஸடையர்' எதிர் பார்த்த அளவுக்குக்கூட வெளிவராததால் தலைசிறந்த நடிகர்களான நாகேஷும், மனோ ரமாவும் கலந்து கொண்டும் சோபிக்காமல் போய் விட்டது. 'நீ முதல்வன்' நாடகத்தில் நெருடலான வசனம் கதையைப் புரிபடாமல் செய்து விட்டது. கல்வி கேள்விகளில் தேர்ந்தவனாக இருந்தாலும் இந்நவீன காலத் தில் இந்தக் காலத்துக்கேற்ற பாவனைக் கல்வி யைக் கற்காவிட்டால் முன்னேற முடியாது என்கிற கிண்டல் சரியாக வெளிப்படவில்லை.

## தர்ம யுத்தம்

மகாபாரதக் கதையும், இராமாயணக் கதையும் சிரஞ்சீவி இலக்கியங்கள். எத்தனை எத்தனை முறைகள் கேட்டாலும் அலுக்காத பொக்கிஷங்கள். 'தர்ம யுத்தம்' மகா பாரதத்தில் தெரிந்த கதைதான்.

அதர்மக் குரல் எழுப்பும் துரியோதன னாக டி. கே. பகவதியும், திருதராஷ்டிரனாக சகஸ்ரநாமமும், கௌரவர் குடும்பத்தில் தப்பிப் பிறந்த விதுரனாக எம். கே. மூர்த்தி யும், கண்ணனாக கே. வி. சீனிவாசனும் 'தர்ம யுத்தத்'தின் கதாபாத்திரங்களாகத் திகழ்ந்து நாடகத்துக்கு உயிரூட்டினார்கள். குந்தி தேவியாக வேடம் தாங்கிய லக்ஷ்மி பிரபாவிடம் குந்திதேவிக்குரிய தாய்மைக் குரல் வெளிப்படவில்லை. தர்மர் வேடம் தாங்கிய மாயாவியின் குரலில் தர்மருக்குரிய கம்பீரத்தைக் காண முடியவில்லை.

'தர்ம யுத்தம்' நாடகத்துக்கு அழகிய வசனம் கொடுத்திருப்பவர் ரா. தயாநிதி. இதிகாச இலக்கியம் என்றுமே சோடை போகாதல்லவா ?

★ ★ ★ ★ ★ ★



குமாரி சிவகுமாரி ராஜையா இலங்கை சர்க்காரில் உயர் பதவி வகிக்கும் திரு சி. ராஜையாவின் அருமைப் புதல்வி; கலா க்ஷேத்திரத்தின் நடன மாணவி; நட்டுவாங்கம் திரு கே. லக்ஷ்மணனிடமும், நிருத்யோதயா வைச் சேர்ந்த குமாரி பத்மாவினிடமும் விசேஷ நடனப் பயிற்சி பெற்றவர். சென்ற மாதம் மயிலாப்பூர் சாயிகான சபையில் இவரது பரதநாட்டிய அபிநயம் நடந்தது. அதில் நடனக் கலையில் இவருக்குள்ள ஆர்வ மும், தேர்ச்சியும் அதியற்புதமாக வெளிப் பட்டன. கலை உலகமே உலகத்தின் வேற்றுமை களையெல்லாம் நீக்கி ஒற்றுமையை உண்டு பண்ணக்கூடியது. உலகம் தோன்றிய நாளாக இந்த உணர்வு மக்களிடையே கலை வளரவும் பரவவும் உதவியிருக்கிறது. இலங்கை-இந்திய நல்லுறவுக்கு உதவுவதுடன் பரதக் கலை வளர்ச்சியிலும் குமாரி சிவகுமாரியின் பங்கு பெருமை தருவதாக அமையுமாக.

சித்திரக் கதைகள்

# இரு கடிதங்கள்

கதை: பி.எஸ்.மணி — சித்திரம்: செல்லம்

கணவன் ஆபீஸ் சென்றபிறகு அவனது டிராயரைக் குடைகிறாள் லக்ஷ்மி.




அன்று மாலை நரசிம்மன் வீடு திரும்பியதும்...










காப்பிகூட அருந்தாமல் வெளியேறிய கணவன் இரவு எட்டுமணிக்குத் திரும்பியபோது வீடு இருண்டு கிடந்தது. வீட்டுக்குடையவளோ...?







இதெல்லாம் என்ன லக்ஷ்மி...? ஓஹோ வேறா உன்னுடைய இந்தக் கோபத்துக்குக் காரணம் இப்போ புரிஞ்சு போச்சு. என் டிராயரைக் குடைஞ்சியா? என் அம்மா எனக்கு எழுதிய கடிதத்தைப் படிச்சியா?
ஏன் படிச்சா என்னவாம்? என்னைப் பற்றி உங்கம்மாவோட அபிப்பிராயம் புரியணுமா இல்லையா?

லக்ஷ்மம்மா! உன்னோட கோபத்துக்கு என்னோட அம்மாவின் கடிதம் காரணமாகும். உன்னுடைய இன்றைய திடீர் ஆசைகளுக்கு என்னோட மாமியாரின் இந்தக் கடிதம்தான் காரணம் என்பதையும் நான் புரிந்திக்காதவனில்லே தெரிஞ்சுதா?

...உம்மணிமூஞ்சி போல்
சமையலறையிலேயே
ஆகவே அம்மாவோட யோசனைப்படி இன்னிக்குப் 'புரோகிராம்' போட்டாயாக்கும்.
எனக்கு வந்த கடிதாசியை ஏன் எடுத்துப் படித்தீர்களாம்? சுத்த மோசம்!

சுத்த மோசம்! எங்கம்மா எனக்கு எழுதின கடிதத்தை நீ எடுத்துப் படித்துவிட்டு இப்படி உம்மணாமூஞ்சியா இருப்பதும் தான். சரி கிளம்பு.
எங்கே கிளம்புறதாம்...?
மணி எட்டரை. நேரே ஹோட்டல் குபேரா. அங்கே 'மேன் லேட்' டின்னர் உனக்கு. அதை அடுத்து நீ சொன்னியே அந்தக் கொஞ்சும் குமரி குதிபோடும் சினிமா... அவர்களை காட்டுகிறார்கள். இரண்டு டிக்கெட் ரிசர்வ் செய்து கொண்டுவந்துவிட்டேன்... ம் ..கடைசியில் வெற்றி எப்போதுமே பெண்களுக்குத் தானே.

ஏதோ சிறுசுகள் எப்படியோ இருந்துவிட்டுப் போகட்டும் என்று இந்த அம்மாக்கள் பேசாமலிருந்தால் என்ன? அவர்கள் உபதேசம் நமக்கு உபத்திரவமாக முடிகிறது....ம்
எது உபத்திரவம்? 'மேன் லேட்' டின்னருக்குச் செலவு செய்யும்படியாயிற்றே அதுவா.
சேச்சே! நீ மறுபடி மறுக்கக் கொள்ளாதே... அம்மா, லக்ஷ்மம்மா!

## சைக்கிளுக்கு ஒரு விழா!

பள்ளிக்கு நூற்றாண்டு விழா! கல்லூரிக்கு நூற்றாண்டு விழா! மருத்துவமனைக்கு நூறு ஆண்டு விழா! ஏன், சாலைகளில் கணக்கில்லாது ஓடும் சைக்கிள்களுக்கு நூற்றாண்டு விழா கொண்டாடக் கூடாது? உங்களுக்குத் தெரியுமா? சைக்கிளை முதன் முதலில் 1866-ம் ஆண்டில்தான் கண்டு பிடித்தாராம் பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த பியரிலால்மென்ட் என்பவர். சக்கரங்கள் மரத்தாலும் டயர்கள் இரும்பினாலும் செய்யப்பட்டிருந்தனவாம். 1888ல்தான் ஜான் டன்லப் ரப்பர் டயர்களைக் கண்டுபிடித்தாராம்!



ஆதாரம்:
டெக்கான் ஹெரால்டு

தகவல்:
ஒய். வி. விஸ்வேஸ்



## தமிழகம் தந்த தத்துவ மேதை

முன் கால் எடுத்து வைத்ததும் உடல் முன்னால் சாய்கிறது. உடனே பின் அடி எடுத்து வைத்து விழாமல் தடுத்துக் கொள்வதே நிமிர்ந்து நடப்பதன் ரகசியம்.

மானிட முன்னேற்றமும் இவ்வாறே நடைபெறுகிறது. முன் சென்று விழப்போவதும், அதைப் பகுத்தறிவு கொண்டு தடுத்துக் கொள்வதுமே முன்னேற்றத்தின் ரகசியம்.

முன் எடுத்து வைக்கும் காலைப் போன்றது கற்பனை. எந்த ஆக்க வேலையிலும் முதலில் கற்பனை வேகம் வேலை செய்ய வேண்டும். பிறகு பின் காலாகிய பகுத்தறிவு உதவிக்கு வந்து நிற்க வேண்டும்.

கற்பனையும் பகுத்தறிவும் இரு கால்களைப் போல் தொடர்ந்து சென்றால் முன்னேற்றம் உண்டாகும். கற்பனையின்றி வெறும் பகுத்தறிவு மட்டும் இருந்தால் போதாது; அப்போது நின்ற இடத்திலேயே நிற்போம்.

ஆதாரம்: 'ராஜாஜி பேசுகிறார்'
தகவல்: பி. ஜி. எஸ். மணியன்

## ○ ○ ○ ○ மின்சக்திக்கும் மேலே! ○ ○ ○ ○ ○ ○ ○ ○ ○

மின்சார வெளிச்சத்துக்குப் பழகிவிட்ட நம் வீட்டில் கோளாறு காரணமாக மின்சாரம் நின்றுவிட்டால் நாம் படும் அவஸ்தையைச் சொல்லிமுடியாது. அமெரிக்காவைப் போன்று விஞ்ஞான வளர்ச்சியிலேயே முதிர்ந்து, மின்சார சாதனங்களுக்கே அடிமையாகி விட்டால் கேட்க வேண்டுமா களேபரத்துக்கு?

வரலாறே கண்டிராதபடி கிழக்கு அமெரிக்காவிலே திடீரென்று பயங்கர இருட்டடிப்பு நேரிட்டுவிட்டது. என்ன கோளாறோ, மின்சார இயந்திரங்கள் நின்று பல இலட்சம் மக்களைப் பெருங் கஷ்டங்களுக்கு இலக்காக்கி விட்டது.

கொஞ்சம் கற்பனை செய்து பார்ப்போம், மின்சாரம் நின்றதனால் என்ன என்னவெல்லாம் நிகழ்ந்திருக்கலாம் என்று. வீட்டு விளக்குகள் மட்டுமென்ன, தெரு விளக்குகள் அணைந்திருக்கலாம். போக்குவரத்தை நிர்வகிக்கும் தானாக இயங்கும் சிக்னல்கள் நின்றிருக்கும். பல மாடிகள் கொண்ட கட்டடங்களில் உள்ள மின்சார லிப்ட்கள் அந்தரத்தில் திரிசங்குவாகத் தொங்கிக் கொண்டிருந்திருக்கும்.

இவற்றை யெல்லாம் நாம் கற்பனை செய்துவிடுவோம். இன்னும் சில நிகழ்ச்சிகள் இதோ:

மின்சாரத்தில் இயங்கும் பல் தேய்க்கும் பிரஷ்கள் மறியல் செய்து விட்டன. மின்சாரக் கத்திகள் ரொட்டிகளைத் துண்டம் போட மறுத்துவிட்டன; டப்பா உணவுகளைத் திறப்பதற்கான கருவிகள் ஸ்டிரைக் செய்துவிட்டன.

மின்சார உதவி கொண்டு திறந்து சாத்தப்படும் கதவுகள் வீட்டில் மக்களைச் சிறைப்படுத்தி விட்டன. அலுவலகங்களில் பணப் பாதுகாப்பும் பெட்டிகள் மின்சாரத்தின் உதவியில்லாததால் மூடிக்கொள்ள மறுத்தன. பலன் ஆயுதம் தரித்த காவலர்கள் பாதுகாப்புக்காக வரவழைக்கப்பட்டு நிறுத்தப்பட்டனர். கணக்குப் போடும் இயந்திரங்களும் ஓய்வெடுத்துக் கொள்ளத் தொடங்கிவிட்டன. எத்தனையோ பாங்குகளில் பணப் புழக்கமே மந்தித்து விட்டது.

ஆஸ்பத்திரிகளுக்கு நேர்ந்த அவதியையோ சொல்லி முடியாது. இரும்பாலான சுவாசப் பைகளும் ஏனைய எலெக்டிரிக் சாதனங்களும் தூங்கிவிட்டன. இதனால் எத்தனை நோயாளிகளுக்கு எவ்வளவு துன்பங்கள்?

ஆயினும் ஒரே ஒரு காரியம் மட்டும் நிற்கவில்லை. ஒரு மருத்துவமனையில் அந்த நேரத்திலும் ஒரு குழந்தை பிறந்தது. அதுவும் மெழுகுவத்தி ஒளியிலே. தாயும் சேயும் நலம் என்று அந்த ஆஸ்பத்திரி ஒரு விசேஷ அறிக்கையே வெளியிடும் அளவுக்கு அது மகிழ்ச்சி தந்தது. இதிலிருந்து அமெரிக்க மக்கள் ஒன்றை நிதர்சனமாக உணர்ந்திருப்பார்கள். அது, மின்சாரத்தின் உதவியில்லாமல் ஒன்று பிறக்க முடியும், ஆனால் மின்சாரத்தின் உதவியில்லாமல் அது வாழத்தான் சிரமப்படுகிறது என்பதுதான்.

–எமெரிகெலன்

ஆதாரம் : ஹிந்து



## காதல் கிரிக்கெட் !

ஒரு பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரர். அடுத்தாற்போல் மட்டை பிடித்து ஆட மைதானத்துக்குள் செல்ல வேண்டியவர் அவர்தான். 'பேடு'களையும், 'க்ளவ்'ஸ்களையும் அணிந்து 'பெவிலிய'னில் தயாராய் அமர்ந்திருந்தார். அவருக்குப் பக்கத்தில் நவநாகரிக பாணியில் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்த ஓர் அழகி உட்கார்ந்திருந்தாள். இருவரும் அந்நியோன்யமாக அளவளாவிச் சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்தனர். பார்த்தாலே காதலர் என்று புரிந்தது.

'பிட்'சில் விளையாடிக் கொண்டிருந்த இருவரில் ஒருவர் அவுட்டாகி விடவே இவர் மட்டையை எடுத்துக் கொண்டு கிளம்பினார். போவதற்கு முன்னால் தம் காதலியைத் திரும்பிப் பார்த்து அன்பும் ஆசையும் பொங்க ஏதோ கூறினார். அதைக் கேட்டு அந்த எழில் நங்கையின் முகம் 'குப்'பென்று சிவந்தது. சுற்றிலுமிருந்தோர் சிலர் காதிலும் அவ்வார்த்தைகள் விழவே அவர்கள் ''வாழ்ந்தது போ!'' என்றார்கள்.

அந்தப் பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரர் தம் காதலியிடம் கூறியது என்ன? (கீழே பார்க்கவும்)

- சாமா



## ✿ ✿ ✿ மறைந்து விடும்! ✿ ✿ ✿

டெரிலின் ஷர்ட் அணிந்து கொண்டு டிப்டாப்பாக ஹோட்டலுக்குள் நுழைந்த வாலிபன் ஒருவன் சாப்பிட்டான பின்தான் தன் பர்ஸைக் கொண்டு வர மறந்து போனதை அறிந்துகொண்டான். இவனுடைய சங்கடத்தைப் புரிந்து கொண்ட ஹோட்டல் முதலாளி நெருங்கி வந்து, 'பரவாயில்லே. இதற்காக நீங்கள் ஒன்றும் கவலைப் படவேண்டாம்' என்று கூறி, சுவரில் ஆணி அடித்திருந்த ஓர் இடத்தைக் காட்டி, 'இந்த ஆணிக்குக் கீழே சுவரில் உங்கள் பெயரை எழுதி வைக்கிறேன். அப்பொழுதுதான் ஞாபகமிருக்கும். உங்களுக்கு எப்போது சௌகரியமோ அப்போது பணத்தைக் கொண்டுவந்து கொடுங்கள். பரவாயில்லே' என்றார்.

அதற்கு வாலிபன், 'சேச்சே, போகிறவர்கள், வருகிறவர்கள் எல்லோரும் என் பெயரைப் படிப்பார்கள்! எவ்வளவு அவமானம்?' என்றான். அதைக் கேட்ட முதலாளி 'நாலு பேர் படித்தால்தானே ஸார் அவமானம்? எப்படிப் படிக்க முடியும்? பெயரை மறைத்துக் கொண்டுதான் உங்கள் டெரிலின் ஷர்ட் தொங்கிக் கொண்டிருக்குமே!' என்றார்.

— எஸ். டி. ராகவன்

✿ ✿ ✿ ✿ ✿ ✿ ✿ ✿ ✿

## காலம் கெட்டுப் போச்சு !

நீதிபதி: காலையில் எப்படித் தைரியமாக அந்த வீட்டில் நுழைந்து திருடினாய்?

திருடன்: காலம் கெட்டுக் கிடக்கிறதுங்க. ராத்திரியிலே திருடிய பொருள்களைப் பத்திரமாகக் கொண்டுவர முடிவதில்லை.

- ஜெயா



பொன்மொழி:

**" பணம் பேசினால் யாருமே இலக்கண வழுவைப் பொருட்படுத்துவதில்லை"**

## ரயில்களைக் காணவில்லை !

சாதாரணமாகச் சைக்கிள்கள், கார்கள் முதலியவைதான் காணாமற் போகும் என்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். முழுதாக இரண்டு ரயில்களும் மற்றும் ஒரு பாதி ரயிலும் (சரக்கு ஏற்றிச் செல்பவை) காணாமற் போன அதிசயம் பிரிட்டனில் நடந்திருக்கிறது.



பிரிட்டனின் தென்மேற்கு மூலையிலுள்ள 'கார்ன்வால்' என்ற இடத்திலிருந்து 'கிரிம்ஸி' என்னுமிடத்துக்குச் சைனாக் களிமண் ஏற்றிச் சென்ற மூன்று கூட்ஸ் ரயில்களில் பாதி ரயில் மட்டுமே கிரிம்ஸி போய்ச் சேர்ந்திருக்கிறதாம். ''மற்ற ரயில்கள் காணாமற் போனது ஆச்சரியமாக இருக்கிறது'' என்கிறார் ஒரு ரயில்வே அதிகாரி.

—'ஆரார்'

**விடை: காதல் கிரிக்கெட்**

" டார்லிங்! உன்னைத் தனியாக விட்டு விட்டுப் போக எனக்கு மட்டும் வருத்தமாக இல்லையா என்ன? கொஞ்சம் பொறுத்துக் கொள், இதோ ஒரு நொடியில் வந்து விடுகிறேன் " என்றார் அந்தப் பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரர்!

# 5



வெளியே வந்த நாணுவுக்கு வேலூரின் வீதி ஒன்றில் நடப்பதாக எண்ணம் இல்லை. அத்தானின் கையால் அடிபட்டதுமே அது வேலூராக இல்லாமல் வேற்றூராகி விட்டது. அந்த ஊரில் அவனுக்காக இரக்கப்பட, அவனைப் புரிந்துகொள்ள யார் இருக்கிறார்கள்? ஜெகு இருப்பதென்னவோ உண்மை. ஆனால் அவனை நம்பிப் பயனில்லை. சரியாகப் பன்னிரண்டு மணிக்கு நாணுவை வரச் சொல்லி விட்டு அவன் கண் காணாமல் மறைந்து விட்டான். கமலா, சீதா, ருக்கம்மா எல்லாருமே அவனை, 'ஐயோ, பாவம்!' என்று ஏற்றுக்கொண்டவர்களே தவிர அவனைப் புரிந்து கொண்டு வாதாட வருபவர்களல்ல!

ஏன் அந்த ஊருக்கு வந்தோமென்றிருந்தது அவனுக்கு. நெஞ்சில் கனன்ற தீயை ஊதி ஊதி வளர்த்துக் கொண்டே தெரு முனைக்கு வந்து நின்றான்.

''யார்டா, பையா?.... இங்கே வா'' என்ற குரல் கேட்டது.

அழைத்த குரல் ஒரு வீட்டின் நிலைப்படியில் நின்றது. அந்த அம்மாளை அவன் முன்பின் பார்த்ததில்லை. ஐம்பதை எட்டிவிட்ட வயதுக்குள்ளிருந்து அன்பைச் சுமந்துகொண்டு அந்தக் குரல் வெளி வந்தது.

நாணு அவளையே பார்த்தபடி நின்றான்.

''இங்கே வா'' என்று அவனை மீண்டும் அழைத்தாள் அவள்.

''எதற்காக ?''

''வெறுமேதான்.... பண்ணையார் வீட்டுப் பையன் தானேடா நீ?''

''ஆமாம்.''

''வாயேன்.''

நாணு தயங்கித் தயங்கி அந்த வீட்டின் முன்னால் சென்றான்.

''உள்ளே வா. இதை உன் வீடு மாதிரி நினைத்துக் கொள்ளப்பா'' என்றாள் அவள்.

இந்தச் சமயம் உட்புறமிருந்து வெண்கலக் குரலொன்று, ''லட்சுமி, யார் அங்கே?'' என்றது.

''பண்ணையாரின் வீட்டுக்கு வந்திருக்கிறானே, சுந்தரியின் பிள்ளை, அவன் வந்திருக்கிறான்'' என்றாள் அந்த அம்மாள். பிறகு நாணுவைப் பார்த்து, ''மாமா, உன்னைப் பார்க்க ஆசைப்படுவார்.... வா.... காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாம்'' என்று கூறினாள் அவள்.

அவன் பதில் ஏதும் சொல்லாமல் நிற்கவே, ''பலகாரமாவது சாப்பிடேன்'' என்றாள் அந்த அம்மாள். அதற்கும் அவன் ஏதும் சொல்லவில்லை. ''ஏன், என்னவோ போலிருக்கிறாய்?.... யாராவது உன்னை அடித்தார்களா ? கண்ணெல்லாம் சிவந்திருக்கிறதே !'' என்று கேட்டாள் அவள்.

தான் அடிபட்டதும் அழுததும் வெளிப்பட்டு விட்டதை நாணு விரும்பவில்லை. அவனுக்கு இதிலெல்லாம் தன்மான உணர்வு மிகுதி. பிறர் வீட்டில் சாப்பிடக் கூடாது.

# யாத்திரை

ஏ.எஸ்.ராகவன்

தண்ணீர்கூட அருந்தக் கூடாது என்று அவனுடைய அம்மா சொல்லியிருந்தாள்.

அவனுடைய முகபாவத்தையே கூர்ந்து கவனித்த அந்த அம்மாள் அவனுடைய பதிலை எதிர்பார்க்கவில்லை. "எனக்குத் தெரியுமே.... கல்யாணி உன்னைச் சும்மா விடமாட்டாளே!....வாடாப்பா, ராஜா மாதிரி இருக்கிறாய். உன்னுடைய அருமை அவளுக்கு எங்கே தெரியப் போகிறது?" என்றாள்.

உட்புறம் வெண்கலம் சிரித்தது. "அகப்பட்டுக் கொண்டாயா, பையா? லட்சுமி உன்னைவிட மாட்டாள்...... கோயமுத்தூருக்கு உன்னை மூட்டை கட்டிக் கொண்டு போக அவள் திட்டமிடுகிறாள்.... தப்பித்து ஓடி விடு" என்றது.

நாணு பயந்துதான் போனான்.

"குழந்தையை எதற்காகப் பயப்படுத்துகிறீர்கள்?" என்றாள் அவள்.

"நான் பயப்படுத்தவில்லையே? ஆறுதல் அல்லவா சொல்லிக் கொண்டிருக்கிறேன்!" என்று சிரித்தார் உட்புறமிருந்தவர்.

"போதும். சும்மா இருங்கள்" என்றாள் அம்மாள். "பாவம், கண்ணெல்லாம் கலங்கி யிருக்கிறது குழந்தைக்கு.... ஆறுதல் சொல்லாமல் கேலி பேச இதுவா நேரம்?" என்றவள் நாணுவைப் பார்த்து, "குழந்தை, எங்களோடு கோயமுத்தூருக்கு வருகிறாயா?" என்று அன்புடன் வினவினாள்.

"எதற்காக?" நாணு கேட்கவில்லை. உட்புறமிருந்து அவர்தான் கேட்டார்.



''அங்கே வந்தால் காலேஜில் சேரலாம்.''

''நீ யார் அவனைக் கூப்பிட?''

''நான் லட்சுமி..... தெரிந்து கொள்ளுங்கள். நான் கூப்பிட்டால் அவன் வருவான்..... ஏண்டா, குழந்தை, வருவாயோ இல்லையோ?''

''மாட்டான்.''

''நீங்கள் வெறுமே இருக்கமாட்டீர்களா?''

அவர் சிரிப்பது கேட்டது. வெளியே வராமல் அவர் ஏன் உள்ளிருந்தே பேசுகிறார் என்பது நாணுவுக்கு வியப்பாக இருந்தாலும் அந்தத் தம்பதியின் சம்பாஷணை சுவையாக இருந்தது.

''குழந்தை, மாமா எப்போதுமே இடக்காகத்தான் பேசுவார். அவருக்கு எல்லாமே வேடிக்கைதான்..... வலது காலில் வாதம் வந்து சிரமப்பட்டார். இப்போது தேவலே. முதலியார் கொடுத்த எண்ணெயைத் தேய்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதால் வெளியே வரவில்லை..... நீ கோயமுத்தூர் வந்து விடேன். அங்கே உனக்கு ஒரு தங்கச்சிப் பாப்பா இருக்கிறாள். உன்னை அண்ணாவாகக் கொண்டாடுவாள்......'' என்றாள் லட்சுமி அம்மாள்.

அந்தக் குரல், அந்த அழைப்பு நாணுவை என்னவோ செய்தது.

''லட்சுமி, இதென்ன அசடு மாதிரி? அவன் யாரோ, நாம் யாரோ?..... நம் வீட்டுக்கு அவன் எப்படி வருவான்?'' கேலிக்குப் பதில் கேள்வி வந்தது உட்புறமிருந்து.

''ஏன்? வந்தால் என்னவாம்?'' லட்சுமி அம்மாள் கேட்டாள்.

''பத்மநாபன் அவனை அனுப்பமாட்டான். சுந்தரியின் பிள்ளையை அவன் அனுப்புவானா? கல்யாணிக்குப் பயந்து கொண்டு நீதான் வேலூரை விட்டு ஓட வேண்டும்..... இவனை ஏன் ஓடச் சொல்கிறாய்....?''

லட்சுமி அம்மாள் அதிர்ந்து விட்டாள். பத்மநாபன் நாணுவை அனுப்ப மாட்டார் என்பது அவளுடைய ஆசைக்குப் பெருந் தடையாக முளைத்து விட்டாற்போல் தோன்றவே பிரமை பிடித்தவளாக நின்றாள்.

இதுதான் சமயமென்று நாணு அங்கிருந்து நழுவித் தெருவுக்கு வந்தான். அந்த அம்மாளின் அழைப்பை ஏற்பதோ மறுப்பதோ இரண்டுமே அவனால் முடியாது. அந்தத் தர்மசங்கடத்திலிருந்து விடுபட்டாற்போதுமென்று கண் மூடித் திறப்பதற்குள் அங்கிருந்து பறந்தே விட்டான். அடேயப்பா, என்ன மனசு அந்த அம்மாளுக்கு! வழியில் போகிறவனைத் தன் வீட்டுப் பிள்ளையாக்கும் அன்புள்ளம்கூட உலகில் இருக்கிறதா?

''சின்னப் பையா, எங்கே இந்தப் பக்கம் ?'' வைத்தியர் வீட்டுத் திண்ணையிலிருந்து கேள்வி வந்தது.

''ஏன் அழுதாய்?''

''நான் அழவில்லையே....'' என்றவாறே அவன் திண்ணையை நோக்கிச் சென்றான்.

''இதோ பார், வைத்தியனிடமும் வக்கீலிடமும் பொய் சொல்லக் கூடாது.... இப்போதைக்கு இதைத் தெரிந்து கொள். வளர்ந்து பெரியவனானதும் மூன்றாவதாக ஓர் ஆசாமியிடமும் பொய் சொல்லக் கூடாது என்பதை அறிந்து கொள்வாய்...... அந்த மூன்றாவது ஆசாமி யார் தெரியுமா? பெண் சாதி...... ஆமாம். பெண்சாதியிடம் பொய் சொல்லக் கூடாது.''

''அத்தான், என்னை அடித்து விட்டார், வைத்தியரே !''

இதைக் கேட்டு முதலியார் சிரித்தார். சிரித்த போது அவர் கண்கள் கேலியால் பூரித்தன.

''அத்தான் அடித்தாரா ?''

''ஆமாம்.''

''அதற்காக அழலாமா? அவர் கையால் அடிபட நீ நிரம்பப் பாக்கியம் செய்திருக்க வேண்டும், பையா.... சரி, உட்கார்...அவர் ஏன் அடித்தார் உன்னை?''

நாணு நடந்தவற்றை அப்படியே சொன்னான். கேட்டுவிட்டு முதலியார் துயரமுற்றவராய், ''கல்யாணி அம்மாளின் குணம் மாறவேயில்லை..... என்ன செய்வது?....'' என்றார். ஒரு பெருமூச்சு இழைந்து கொண்டு வந்தது. ''நானும் உன் வயசில் இப்படி எல்லாம் இண்டாடியவன்தான், பையா! என் சிற்றன்னை என்னைப் படுத்தி வைத்த பாடு உன் அம்மாவுக்குத் தெரியும்..... நிறைய அடிபட்டிருக்கிறேன்.... வாழ்க்கையில் அடிபட்டால்தான் முன்னேறலாம்..... பார்க்கப் போனால் வாழ்க்கையே ஒரு யாத்திரைதான். அதிலே நல்லவர்களும் உண்டு. கெட்டவர்களும் உண்டு. ஊமைகளும், செவிடர்களும், அறிஞர்களும், கலைஞர்களும் உண்டு...... சில மனிதர்கள் வெறும் சுமை தாங்கிகளாகவே இருந்து வருகிறார்களே, நீ பார்த்ததில்லை?.... வாழ்க்கைப் பாதை பல ரகமாக மாறி மாறி வரும்..... எதற்கும் கலங்கக் கூடாது, பையா...! மனோதிடம் தான் முக்கியம்.'' முதலியார் அவனுக்குப் பல அனுபவ உண்மைகளை உபதேசிக்கலானார். ஆறுதலையும் அன்பையும் நாடி வந்தவனுக்கு அவருடைய பேச்சு பாகாய் இனித்தது. இப்படிச் சொல்ல யார் இருக்கிறார்கள் ? வாழ்க்கையை இப்படி விமரிசிக்க யாருக்குத் தெரிந்திருக்கிறது? ''ஆமாம். மனோதிடம் முக்கியம். கோழையாக வாழ்வதைவிட உயிரை விடுவதே மேல்..... இமைகளை எதிர்த்துப் போராடத் தயங்கக் கூடாது.... உனக்குத் தெரியுமா, பையா, உன் வயசில் நான் இந்த ஊரை விட்டே ஓடிப்போனேன்.''

''ஓடிப் போனீர்களா? ஏன்?''

''வீட்டில் இருக்கப் பிடிக்கவில்லை..... துன்பம் தாளவில்லை..... ஓடினேன்.... அப்படிப் போனதால்தான் இந்த வைத்தியசாஸ்திரத்தை நம்பூதிரி சுவாமியிடம் கற்றுக் கொண்டு வர முடிந்தது...... ஆனால் அதைக் கற்பதற்குள் நான் பட்ட கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல.''

கதை கேட்பவன் போல் நாணு அவரையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

''நம்பூதிரி ஸ்வாமிக்கு நாராயணி என்று மகள் ஒருத்தி. வளர்ப்புப் பெண்தான். அவள் என்னைக் கல்யாணம் செய்துகொள்ள

# இப்பொழுது மிகச் சிறந்த,

## தனிப்பட்ட கலவைகொண்ட, முச்செயல்-திறனுடைய

### ஹேர் ஆயில் டானிக்




## பிராஹ்மி
## ஆம்லா
## மாகா

ஆகியவை அடங்கியது



பல தலைமுறைகளாகப் பயன்பட்டுவரும் பிராஹ்மி, ஆம்லா, மாகா ஆகியவை இப்பொழுது ஒரு அற்புத ஹேர் ஆயிலான **பேமில்**, உங்களுக்கென, ஒருங்கே இணைந்து கிடைக்கின்றன. **பேம்** கால்கேட்-பாமாலிவ் கம்பெனியாரின் புதிய, தரமான தயாரிப்பு.

**பேமில்** அடங்கியிருக்கும் சேர்க்கைப் பொருள்களான பிராஹ்மி-ஆம்லா-மாகா தலைமுறை தலைமுறைகளாக கேசத்தை அழகுபெறச் செய்யும் குணங்களுக்காகவும், அபரிமிதமான கேச வளர்ச்சிக்காகவும், கேசம் உதிர்வதையும், முதுமை எய்துமுன் நரைப்பதையும் தடுப்பதற்காகவும், மயிர்க்கால்களுக்கு இதமளித்து,

# பேம்

அயர்ந்த நித்திரையை வருவிப்பதற்காகவும் பெரிதும் போற்றப்பட்டு வருகின்றன.

பழமைவாய்ந்த இந்தியக் கலவை முறையை நம்புங்கள்...தினந்தோறும் உங்கள் மயிர்க்கால்களில் **பேம்** தேய்த்து, மிருதுவான அடர்ந்த, நெளிநெளியான, செழுமையான கூந்தலைப் பெறுங்கள்.

CGHO.G.I TAM.

ஆசைப்பட்டான். நான் முடியாது என்று சொல்லி விட்டேன்.....''

இச்சமயம் உட்புறமிருந்து முதலியாரின் மனைவி பார்வதம் வந்து தலை நீட்டி, ''ஆரம்பித்து விட்டீர்களா உங்கள் புராணத்தை ? ஏன், அந்த நாராயணியையே கல்யாணம் செய்து கொண்டிருப்பதுதானே, நானு வேண்டாம் என்றேன்?'' என்றாள்.

''அப்படிச் செய்து கொண்டிருந்தாலும் அவள் இதே கேள்வியைத்தான் கேட்பாள். 'உங்கள் முறைப் பெண் பார்வதத்தையே கல்யாணம் செய்து கொண்டிருப்பதுதானே?' என்று..... பெண்களெல்லாமே ஒரே ரகம்'' என்று சிரித்தார் முதலியார்.

''ஆமாம். ஒரே ரகம்தான்..... ஆண்களைப் போல் பல ரகம் அல்ல..... பேசாமலிருங்கள்...... உங்கள் வண்டவாளத்தை எல்லாம் எடுத்து விட்டு விடுவேன்.''

''விடேன். யார் நம்புவார்கள் உன்னை?''

''ஏன்? நான் நம்புகிறேன் என்னை!''

''அடியே, அது பெரிய தத்துவமடி.... நம்மை நாமே நம்புவது என்பது உயர்ந்த விஷயம். பல பேருக்கு நம்பிக்கை வெளியே

குருவின் சாபம் கூடாது" அல்லவா?.... கடைசியில் விஷம் சாப்பிட்டுச் செத்துப் போவதென்று முடிவு செய்து விட்டேன்!''

நாணு விழித்தான்.

''விஷமும் சாப்பிட்டேன். ஆனால் என் உயிர் போகவில்லை..... நாராயணிதான் காப்பாற்றினாள்....... கடைசியில் அந்த விஷத்தால் அவள் உயிரை இழந்தாள்....பையா, உலகத்தில் அன்பு என்கிற சக்தி இருக்கிறதே, அது எதையும் சாதிக்கும் என்பதற்கு நாராயணி உதாரணம்..... கூடத்துக்கு வா. அவளுடைய படத்தை உனக்குக் காட்டுகிறேன்.''

வெளியிலிருந்து பார்ப்பதற்குச் சிறு வீடாகத் தோன்றிய முதலியாரின் வாசஸ்தலம் உட்புறம் மிகத் துப்புரவாய், அழகாய், மருந்தின் நெடி வீசும் மணமுள்ளதாய் விரிந்தது. கட்டுக் குடுமியாய் வெளித்தோற்றம் காட்டும் அவர் மனமென்னும் மிகப் பெரிய, அழகான, மணமுள்ள வீட்டின் சொந்தக்காரர் என்பதின் பிரகடனமாக அது தெரிந்தது.



## நூற்றுக்கு மேலே !

தங்கை கலாவிடம் நாங்கள், 'நீ எல்லோரையும்விட நன்றாகப் படித்து நிறைய மார்க்குகள் வாங்க வேண்டும். நூற்றுக்கு மேலேயே வாங்கணும்' என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்போம். ஒரு நாள் பள்ளி விட்டதும் அவள் எங்களிடம் வந்து, 'நான் இன்று நூற்றுக்கு மேல்தான் மார்க்கு வாங்கியிருக்கிறேன்' என்று பெருமையுடன் தன் சிலேட்டைக் காண்பித்தாள். அதில் நூற்றுக்குத் தொண்ணூறு மார்க் என்று போட்டிருந்தது. தொண்ணூறுதானே போட்டிருக்கிறது என்று நான் குழம்பிக் கொண்டிருக்கையில் கலா, 'நூறு என்று எழுதி, அதற்கு மேல்தானே மார்க் போட்டிருக்கிறார்கள். நூற்றுக்கு மேலே தானே மார்க் வாங்கியிருக்கேன்' என்று சொன்னாள்!

எம். எஸ். லீலா, பொன்னமராவதி




சிதறிப் போய்த் தடுமாற்றம் வந்து விடுகிறது...... தன்னைத் தானே நம்புவது,— அதாவது நம்பிக்கைக்கு ஆதாரமான சக்திகளைத் தனக்குள்ளே வளர்த்துக் கொள்வது, அப்படி வளர்ந்த தன்னை நம்புவது என்பது பெரிய விஷயம்.''

பார்வதம் அம்மாள் சிரித்தபடியே உள்ளே போய் விட்டாள். தன் மீது அவளுக்கு இருந்த நம்பிக்கை அவரில் வேறு படாதிருந்த தன்மையின் வெளியீடாக மலர்ந்திருப்பதை நாணுவால் புரிந்து கொள்ள முடிந்தது. சற்று முன்பு அன்பு காட்டி அவனைக் கோவைக்கு அழைத்த லட்சுமி அம்மாளும் அவள் கணவரும் ஒரு ரகத்தைச் சார்ந்தவர்களாகவும் முதலியாரும் அவர் மனைவியும் மற்றொரு ரகத்தினராகவும் காட்சி தந்தார்கள். இத்தகைய அன்புள்ளங்களிடையேதான் அத்தையும் இருக்கிறாள்!

''நாராயணியை நான் கல்யாணம் செய்து கொள்ள மறுத்ததால், நம்பூதிரி சுவாமிக்கும் என் மீது கோபம்..... என்னை ஆசீர்வதிக்க அவர் மறுத்து விட்டார்....

கூடத்திலிருந்த நாராயணியின் படத்தை நாணு பார்த்தான். அவளை ஏன் கல்யாணம் செய்து கொள்ள முதலியார் மறுத்தார் என்பதோ, அவள் ஏன் அவரையே கல்யாணம் செய்து கொள்வதாகப் பிடிவாதம் பூண்டாள் என்பதோ அவனுக்குப் புரியாவிட்டாலும் ஆழ்ந்த அன்பு அந்தத் திருமுகத்தில் துலங்குவது பளிச்சென்று புரிந்தது.

''இந்த நாராயணியின் கதை இப்படி ஆயிற்று..... அப்புறம் பார்வதத்தைக் கல்யாணம் செய்து கொண்டேனப்பா.... அதன் பிறகு.....'' என்று அவர் தொடர்வதற்குள் அந்த அம்மாளே குறுக்கிட்டு, ''தயவு செய்து வந்த பையனுக்கு மருந்து கொடுத்து அனுப்புங்கள்..... சுயபுராணம் படிப்பதென்றால் உங்களுக்குப் பாயசம் சாப்பிடுகிற மாதிரி ஆயிற்றே !'' என்று ஆணையிட்டாள்.

''இவனுக்கு மருந்துதான் தந்து கொண்டிருக்கிறேன், பார்வதம்.....'' என்றார் அவர்.

''போதுமே..... உங்கள் தத்துவமெல்லாம் அவன் வயசுக்கு விளங்குமா?''

"தத்துவத்துக்கு வயசு தடையில்லை.... எத்தனை வயசானாலும் சில பேருக்குத் தத்துவம் விளங்காமல் இருக்கிறதே. அதற்கு என்ன சொல்கிறாய் ?"

"நீங்கள் மார்க்கண்டேயர் மாதிரி என்றும் பதினாறாக இருப்பவராயிற்றே !" அவன் சிரித்தான்.

"நீ நளாயினி மாதிரி!"

"அது வாஸ்தவம்தான்...."

"பையா! என் கதை ரொம்பப் பெரிசு.. அதைவிடப் பெரிசு இந்தப் பார்வதத்தின் கதை.... வா.... இந்த அறைக்குள் உட்கார்ந்து பேசுவோம்."

அது அவருடைய மருந்தகம் என்று எடுத்த எடுப்பிலேயே தெரிந்தது. வரிசை வரிசையாகக் குப்பிகள் அணிவகுத்து நின்றன எதிர்ப்புற அலமாரியில். கணக்குப் பிள்ளை மேசை ஒன்றும் அதன் மீது ஒரு திறந்த புத்தகமும் அருகில் பேனாவும் கிடந்தன. பெண்களுக்கு நாடி பார்க்க அவர் பயன்படுத்தும் பட்டுத் துணி அருகில் கிடந்தது.

"பார்வதத்தைக் கல்யாணம் செய்து கொண்ட பிறகு, விஜயம் என்ற பெண் வந்தாள்..... அவளுக்காக நான் விஷம் சாப்பிடத் தீர்மானித்தேன்."

மருத்துவரின் வாழ்வில் விஷம் இப்படிப் புகுந்து விளையாடியிருப்பது நாணுவுக்கு வியப்பாக இருந்தது. விஜயமும் அவரை மணக்க விரும்பினாளா, என்ன? அப்படிப் பெண்கள் விரும்புகிற அளவுக்கு அவரிடம் என்ன மாயம் இருந்தது !

"ஆனால் சாப்பிடவில்லை. அவளே விஷமாகத்தான் இருந்தாள்..... அத்தை அம்மாள் இருக்கிறார்களே, அந்த மாதிரி....உம்.. நடந்து வந்த வாழ்க்கை யாத்திரையை நினைத்தால் மனசுக்குக் கஷ்டமாகவும் சந்தோஷமாகவும் இருக்கிறது. விஜயம் அழகே உருவான பெண்..... மருந்து வாங்க வந்தாள்...... மனசைத் திறந்து சொல்கிறேனே, அவள் மீது எனக்கு அன்பு பிறந்தது..... பார்வதத்திடம் சொன்னேன்."

"சொன்னீர்களா?"

"உம்..... அவள் சிரித்தாள்.... என்னைப் புரிந்து கொண்டு சிரித்தாள் என்று நான் நினைத்தேன்..... ஊஹூம்....அந்த விஜயத்தைப் புரிந்து கொண்டு அவள் சிரித்தாள்..... அவள் சிரித்தபடியே ஆயிற்று. விஜயம் விஷமாக இருந்தாள். என் முகத்தில் காரி உமிழ்ந்து விட்டு அவள் போயிருந்தால் நன்றாக இருந்திருக்கும். அவள் அப்படிச் செய்யவில்லை...... ஊரே காரி உமிழும்படி செய்ய முனைந்தாள்..... அதாவது..... பையா, நீ ரொம்பச் சின்னவன். உனக்கு இதெல்லாம் விளங்காது..... உன்னிடம் இதை யெல்லாம் சொல்லவும் கூடாது..." முதலியார் நிறுத்திவிட்டுப் பெருமூச்சு விட்டார். "அத்தானுக்கு எல்லாக் கதையும் தெரியும். அவருடைய கதை முழுதும் எனக்குத் தெரியும்..... விஜயம் நல்லவள் அல்ல. நல்லவள் போல் நடித்தவள்..... என்னைப் போல அவளை நம்பியவர்கள் பலர்... கடைசியில் பழியைத் தாங்க என்னைத் தேர்ந்தெடுத்தாள் அவள்..... பார்வதம் காப்பாற்றினாள் இந்த விஷத்தை....."

நாணுவுக்கு எல்லாம் புரிவது போலிருந்தாலும் புதிராகவும் இருந்தது. அவர் வர்ணித்த பெண்ணைப் போன்றவர்கள் உலகில் இருப்பார்களானால் அன்பு பூணுவது ஆபத்தாக அல்லவா ஆகிவிடும்? இது தெரிந்துதான் அம்மா அவனை எச்சரித்தாள் போலும் !

வாசலில் வில் வண்டி ஒன்று வந்து நிற்கிற ஓசை கேட்டது. அடுத்து, "சிங்காரம், இருக்கிறாயா வெளியே புறப்பட்டு விட்டாயா?" என்ற குரல் கேட்டது. வந்தவள் அத்தை என்று தெரிந்ததும் நாணுவுக்குக் கேட்ட கதை யெல்லாம் மறந்து போய் அவளிடம் தான் படும் வேதனைக் கதைதான் நினைவுக்கு வந்தது.

"பையா, நீ இங்கேயே இரு...." என்று அவனை அமர்த்திவிட்டு முதலியார் வெளியே சென்றார்.

"சிங்காரம்! அந்தப் பிசாசு என் மூக்குக் கண்ணாடியை உடைத்து விட்டதப்பா..... கண்ணே தெரியவில்லை. தலைவலி உயிர் போகிறது. ஏதாவது மருந்து கொடேன் " என்றாள் அத்தை.

"உட்காருங்கம்மா.... தலைவலிதானே? மருந்து தருகிறேன்....." என்றார் சிங்கார முதலியார்.

"வெறும் தலைவலியோடு இருந்தால் பரவாயில்லையே, இது திருகுவலிடா, சிங்காரம்...... எங்கோ கிடந்த அநாதைப் பிண்டமெல்லாம் இங்கே வந்து என் உயிரை வாங்குகிறதுகள். இவனை ஒழித்துக் கட்ட வேண்டும் முதலில்..... சே ! ஊரே சிரிக்கிறது...... வருகிற வழியில் நம் வெங்கிட்டு வாத்தியார் என்ன சொன்னார், தெரியுமா?"

"அவர் கிடக்கிறாரம்மா.... விட்டுத் தள்ளுங்கள்.... அவருக்கு நல்லதே தெரியாது."

"நீ ரொம்பக் கண்டாயோ?.... வியாஜ்யம், வழக்கு இதிலெல்லாம் வெங்கிட்டு மன்னனுக்கும்!.... அவன் எடுத்த கேசு எது தோத்திருக்கு?"

"பொய்தான் உலகத்திலே ஜெயிக்கிறது, அம்மா."

"நீ ஏதாவது சாமியார்ப் பேச்சுப் பேசாதே......"

"கல்யாணியம்மா, உங்களுக்குத் தெரியாத இல்லை. இந்த வெங்கிட்டு நம்ம பண்ணைக்கே வேட்டு வைத்தவர் ஒரு காலத்திலே.... ஹைகோர்ட்டு, சுப்ரீம் கோர்ட்டு என்று அப்பீல் செய்து கொண்டு அலைகிறவர்..... சொத்தை யெல்லாம் தொலைத்தும் அவருக்குப் புத்தி வரவில்லை..... இன்றைக்கும் நாலு வழக்கு பஞ்சாயத்துக் கோர்ட்டிலே ஜில்லா கோர்ட்டிலே அவருடையது தூங்குகிறது...... வழக்கு இல்லாவிட்டால் அவருக்குத் தூக்கம் வராது."

"நீ விஷயம் தெரியாமல் பேசுகிறாய், சிங்காரம்..... வெங்கிட்டு என்ன சொன்னான் என்று கேட்டுவிட்டு அப்புறம் சொல்லு."

"சரி. சீக்கிரம் சொல்லுங்கள்."

## திருமணம்

ஸ்ரீ G.N. ராஜன் (alias) G. நடராஜ முதலியார் (மத்திய ரயில்வே, பம்பாய்) அவர்களின் மைத்துனர் சிரஞ்சீவி G. பார்த்தசாரதிக்கும் (பல்கலைக் கழகம், சென்னை), சென்னை S.P. சண்முகம் & சன்ஸ் மானேஜர் ஸ்ரீ C.V. பார்த்தசாரதி முதலியார் குமாரி சௌபாக்கியவதி தனலக்ஷிமிக்கும் சென்னையில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !







## திருமணம்

சென்னை அட்வகேட் ஸ்ரீ எம். எஸ். ராமஸ்வாமி - ஸ்ரீமதி வசுமதி ராமஸ்வாமி அவர்களின் குமாரத்தி சௌ. விஜயலக்ஷிமிக்கும் ஸ்ரீ எஸ். பி. வாசுதேவன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி ராஜசுந்தரம் அவர்கட்கும் சென்னையில் சமீபத்தில் திருமணம் நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !

நீங்கள்
பொலிவுடனிருக்க
சார்மிஸ்
உபயோகியுங்கள்!




# புதுமை பெறுக... இதம் பெறுக...
# நாள் முழுவதும் நளினமாய் இருங்கள் !

நாள் முழுவதும் நளினமாய் இருக்க, புதிய சார்மிஸ் உபயோகித்து, குளுமையையும், புத்துணர்ச்சியையும் பெறுங்கள். பளபளப்பான, புதிய டின்னில் உள்ள சார்மிஸ், வியக்கத்தக்க வகையில் உங்களுக்குப் புத்துணர்ச்சியளித்து உங்கள் அழகைச் சோபிக்கச் செய்யும் அந்த உன்னத மனோரம்மிய நறுமணத்தைக் கொடுக்கிறது.

# சார்மிஸ்

உன்னத மனோரம்மிய மணத்துடன் கூடிய
டால்கம் பவுடர்

CH.TP.G.13 TM

நாணு காதைத் தீட்டிக் கொண்டான். அவள் சொன்னதைக் கேட்டதும் அவனுடைய காது மட்டுமல்ல, உடம்பே எரிந்தது தீப்பற்றியது போல.

''சுந்தரியின் கதைதான் உனக்குத் தெரியுமே?..... கல்யாணமான ராத்திரியே ஊரை விட்டுப் புருஷனுடன் ஓடினவள் ஆச்சே மகராஜி!.... அப்புறம் அந்த அழகான புருஷனை ஜெயில்லே பிடிச்சுப் போட்டுவிட்டார்கள்!......''

''கல்யாணியம்மா!'' முதலியார் அவள் வாயை மூட முயன்றார். முடியவில்லை.

''புருஷனை ஜெயில்லே தள்ளிவிட்டு இவள் தனுக்கா வாழ ஆசைப்பட்டாள்.... அண்ணு மாசா மாசம் பணம் அனுப்பி வந்தார்..... இந்த நாணு அண்ணுவுக்குப் பிறந்த பிள்ளை தான் போலிருக்கு !''

நாணுவின் உடலின் ஒவ்வோர் அணுவும் அந்த அணுவுக்குள்ளிருந்த பரம அணுவும் துடித்தன. உள்ளங்காலிலிருந்து ஓர் அசுர வெறி தலைக்கு ஏறிற்று. கண் சிவந்தது. காலும் கையும் துடித்தன. உடலின் அணுக்களெல்லாம் வெடித்து அவனை விழுங்குவன போலிருந்தன.

''கல்யாணியம்மா, இப்படிப் பேச உங்களுக்கு வெட்கமாக இல்லையா? அண்ணுவை வேறு யாருக்குப் புரியாமல் போனாலும் உங்களுக்குக்கூடவா புரியவில்லை...? வேண்டாம், அம்மா, தயவுசெய்து இப்படியெல்லாம் பேசாதீர்கள்.......'' என்றார் முதலியார். குரல் தழுதழுத்து விட்டது அவருக்கு.

''நான் பேசப் போவதில்லை. உன்னிடம் சொல்லி வைத்தேன்..... ஆனால் ஊர் வாயை மூட முடியாது, பார்.''

முதலியார் வேகமாக உள்ளே வந்தார். நாணு தூங்கி விட்டவன் போல் பாசாங்கு செய்தவண்ணம் அவசரமாகப் படுத்திருந்தான். அவனை எழுப்பினார் அவர். ''பையா, நீ அந்த வாசல் வழியாகப் பின்புறமாகப் போய் விடு..... நாளைக்கு வா..... பேசுவோம்'' என்று சொல்லிவிட்டு அவர் மறுபடியும் வாசற்பக்கம் போனார். நல்ல வேளையாக அவன் காதில் கல்யாணி அம்மாளின் பேச்சு விழுந்திருக்காது என்கிற ஆறுதல் அவருக்கு.

நாணு எழுந்தான். அத்தையை இப்படியே விட்டு விட்டா போவது! அவனைப் பற்றி — அவன் தாயைப் பற்றி — அத்தானைப் பற்றி இப்படி அவள் பேச, அதைக் கேட்டுக் கொண்டு அவன் சும்மா போவதா !

பார்வை அலமாரிக்கு ஓடிற்று. அங்கே ஒரு குப்பி கண்ணில் பட்டது. அதன் மீது 'விஷம்' என்ற குறிப்பு எழுதி ஒட்டப்பட்டிருந்தது தெரிந்தது. அது விஷம் அல்ல; அமிர்தம். நாணுவுக்கு அப்படித்தான் தோன்றிற்று. அதை எடுத்துப் பைக்குள் வைத்துக் கொண்டான். பின்புறமாக வெளியேறினான்.

திடீரென்று வானமே வெளிர்விட்டது போல், புதிரெல்லாம் விலகியது போல், தனது பிரச்னைகளுக்கெல்லாம் ஒரு விடை கிடைத்து விட்டதாகவே அவனுக்குத் தோன்றிற்று. வேகமாக வீட்டை நோக்கி நாணு நடந்தான். (தொடரும்)

* * * * * * * * * * *



## நீ மட்டும் சொல்லலாமா?

அடுப்படியில் சமையலைக் கவனித்துக் கொண்டிருந்தேன். வேலை முடிந்து கூடத்துக்கு வந்தபோது எனக்கும் பகீர் என்றிருந்தது. கொடியில் ஆறப் போட்டிருந்த புத்தம் புதிய பட்டுப் புடவை கிழிக்கப்பட்டு, என் செல்ல மகளின் மரப்பாச்சிக்குத் தூளியாகக் காட்சியளித்தது. 'ஏனடி இப்படிச் செய்தாய்?' என்று கத்தினேன். என் கோபத்தைக் கண்டு பீதி அடைந்தவளாய், 'நான் கிழிக்கவில்லை' என்று மெதுவாகக் கூறினாள். எனக்கு வந்ததே கோபம். 'செய்வதையும் செய்துவிட்டுப் பொய் வேறு சொல்லுகிறாய்? இனிமேல் பொய் சொல்வாயா?' என்று அடி அடி என்று அடித்து விட்டேன்.

இந்த நிகழ்ச்சி நடந்து ஒரு மாதம் இருக்கும். புதுப் படம் ஒன்று வந்திருந்தது. என் கணவருக்கு வரமுடியவில்லை என்று அக்கம் பக்கத்தவரோடு என்னையும் அனுவையும் அனுப்பி விட்டார். என்னிடம் ஐந்து ரூபாய் நோட்டும் இரண்டு ரூபாயும் இருந்தன. தியேட்டரில் கூட்டம் சக்கச்சக்கம். ஒன்றரை ரூபாய் டிக்கட்டுதான் இருக்கிறது என்றான் தியேட்டர்க்காரன். எனக்கு முழு ஐந்து ரூபாயை மாற்ற மனமில்லை. ஒன்றரை ரூபாய் டிக்கட் ஒன்று எடுத்துப் போனேன்.

நுழைவாசலில் டிக்கட் வருலிப்பவனிடம் டிக்கட்டைத் தந்தேன். ஏற இறங்க என்னைப் பார்த்த அவன், 'குழந்தைக்கு டிக்கட் எங்கே?' என்றான். திட்டமிட்டபடியே 'குழந்தைக்கு இரண்டு வயதுதானேப்பா ஆகிறது' என்றேன். சற்றும் எதிர்பாராத விதத்தில் இடுப்பிலிருந்தவள் திடீரென்று, 'என்னம்மா பொய் சொல்றே. எனக்கு நான்கு போய் ஐந்து வயது வரப்போகிறது. பள்ளிக்கூடம் போய்ப் புத்தியாய்ப் படிக்கணும்னு நீ நேத்திக்குக் கூடச் சொன்னியே. அன்னிக்கு என்னைப் பொய் சொல்லாதேன்னு அடிச்சியே. நீ மட்டும் சொல்லலாமா?' என்று போட்டாளே ஒரு போடு. என் பாடு தர்மசங்கடமாகிவிட்டது. பிறகு ஐந்து ரூபாயை மாற்றி இன்னொரு டிக்கட் எடுத்துக் கொண்டு உள்ளே போனேன்.

குழந்தைகளுக்குப் புத்திமதி சொன்னால் மட்டும் போதாது; நாமும் அதன்படி நடக்க வேண்டும் என்று உணர்ந்தேன்.

ஜானகி சீதாராமன்,
சேரன்மஹாதேவி.



* * * * * * * * * *

மார்ச் 4 முதல்

சென்னை:
சித்ரா
ஸ்ரீமுருகன்
ராக்ஸி
மற்றும் தென்னகமெங்கும்




ஸ்ரீ புரொடக்ஷன்ஸ்

# கொடிமலர்

திரைக்கதை, வசனம் & டைரக்ஷன் : ஸ்ரீதர்

ஒளிப்பதிவு : பாலு ▪ இசை : M.S. விஸ்வநாதன்

பாடல்கள் : கண்ணதாசன் ▪ எடிட்டிங் : N.M. சங்கர்

கலை : கங்கா

MOULI



# நான்காம் பாகம்
## உலக வாழ்க்கை

# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன்
— அநுத்தமா

உலக மகாயுத்தம் முடிவடைந்து விட்டது.

1918ம் வருஷம் நவம்பர் மாதம் சமாதான உடன்படிக்கை கையெழுத்தான போது அமைதி உணர்ச்சி தோன்றவில்லையாயினும், ஓரளவு எதிர்காலத்தில் சந்தோஷம் நிலவலாம் என்ற சிறு ஆசை ஒளிர்ந்தது. கப்புலக்ஷ்மிக்கும் அவள் குடும்பத்தினருக்கும் தாற்காலிகமாகவாவது அது ஒரு பெரும் நிம்மதியைத் தோற்றுவித்தது. கடைசியாக மெஸபடோமியாவிலிருந்து எழுதியிருந்தார் சாவித்திரியின் கணவர் துரைசாமி. அவரிடமிருந்து பிறகு கடிதங்களே வரவில்லை. இரண்டு வருடங்களுக்கு மேலாகி விட்டன. அவரைக் காணவில்லை என்பதாகவும் அறிவிக்கப்படவில்லை. யாருமறியாமல் அவர் எங்கோ மறைந்து விட்டது போல் தோன்றியது. சாவித்திரி அடிக்கடி கவலையுடன் எழுதிக் கேட்டதற்கு, ராணுவ அதிகாரிகளால் தகுந்த பதிலளிக்க முடியவில்லை போலும். கடைசியில் துரைசாமியுடன் வேலை செய்த ராணுவ அதிகாரிகளில் ஒருவர் அவரை இத்தாலியில் ஒரு ராணுவ ஆஸ்பத்திரியில் நோயாளிகளுக்கு மத்தியில் அவரும் ஒரு நோயாளியாகப் படுத்திருக்கக் கண்டதாக எழுதினார். அவர் மிகவும் கவலைக்கிடமான வகையில் நோய்வாய்ப்பட்டிருந்தார். தம் மனைவிக்கும், சிறு பெண்களுக்கும் யாரையேனும் விட்டுக் கடிதம் எழுதச் சொல்வதற்குக்கூட முடியாத நிலையில் இருந்தார். கடிதத்தில் என்ன எழுத வேண்டும் என்று கூறக்கூட அவருக்குச் சக்தியில்லை. ஆனால் இப்போது சிறிது குணமடைந்து வருகிறார். இன்னும் சில மாதங்களில் அவர் தம் தாய்நாட்டுக்குத் திரும்பி வந்து, சாவித்திரியின் முகத்தில் மீண்டும் புன்சிரிப்பை வரவழைக்கலாம்.

இஸ்ஹவுஸில் சந்தோஷத்துக்கு வேறு ஒரு காரணமும் இருந்தது. 1918ம் வருஷம் மார்ச் மாதத்தில் மிஸ் லிஞ்ச் ஸ்ரீமதி டிரைஸ்டேல் ஆகிவிட்டிருந்தாள். அங்கிருந்த அநேக இளம் விதவைகளுக்குத் தங்கள் கல்யாணங்களே நினைவிருக்கவில்லை. ஏறக்குறைய ஐம்பது வயதாகிய ஒரு மாது, பேரன் பேத்திகள் எடுக்கும் வயதில் முதன் முறையாகத் திருமணம் செய்து கொள்வது அவர்களுக்குப் புதுமையாக இருந்தது. அவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து, அந்த அம்மாளுக்கு ஒரு வெள்ளிப் பேழை, படம் வைக்கும் வெள்ளிச் சட்டம், அழகான மாலை ஒன்று, எல்லாம் வாங்கித் தந்தார்கள். அந்த அம்மாள் அவர்களை விட்டுப் போகப் போவதில்லை என்று அறிந்ததும் அவர்களுக்கு மேலும் சந்தோஷமாகி விட்டது. ஸ்ரீமான் டிரைஸ்டேலுக்குச் சென்னையில் வியாபாரம் இருந்தது. அவர் மனைவி பொதுப் பணியில் தொடர்ந்து ஈடுபட வேண்டும் என்பதில் சர்க்காரும் மிகுந்த அக்கறை காண்பித்தனர்.

ஸ்ரீமதி டிரைஸ்டேல், கப்புலக்ஷ்மி, மிஸ் பிரேகர், சித்தி யாவரும் தங்கள் தங்கள் அலுவல்களில் மூழ்கியிருந்தனர். திருவல்லிக்கேணிப் பள்ளியிலும், பிராமண விதவைகள் இல்லத்திலும் பெண்கள், அவர்களுடைய ஆசிரியைகள் எதிர்பார்த்

தது போலவே நன்குகப் படித்தனர். மாநிலக் கல்லூரியில் ரசாயனப் பட்டத்துக்குப் படித்து வந்த சொர்ணம்பாளுக்கு ஒரு தங்கப் பதக்கம் பரிசளிக்கப்பட்டது. ஐஸ்ஹவுஸைச் சேர்ந்த பெண்களில் மூவர் டில்லியில் லேடி ஹார்டின்ஜ் வைத்தியக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தனர். பன்னிரண்டு பேர்கள் ஏற்கனவே உபாத்தியாயினிகளாகப் பணி புரிந்து வந்தனர்.

இந்தப் பெண்களில் ஒருத்தியான மீனுட்சி மிகவும் ஆசாரப் பற்றுள்ளவள். அவள் வைதிக முறையில் தலை மயிர் வாங்கி, வெள்ளைப் புடவை உடுத்தி வந்தாள். அவள் ஐஸ்ஹவுஸில் வந்து சேரும் போது, தான் படித்துப் பிழைப்புக்காக வேலை பார்க்க விரும்பினாலும் தன் கோலத்தை வளர்த்துக் கொள்ளவோ, உடையை மாற்றிக் கொள்ளவோ விரும்பவில்லை என்று சகோதரியிடம் கூறிவிட்டாள். அவளுடைய விருப்பத்துக்கு மதிப்புத் தரப்பட்டது. பிறகு வந்து சேர்ந்த வயதான பெண்மணிகளில் சிலரும் மீனுட்சியைப் போலவே இருந்து விட்டனர். அவர்களைக் கேலி செய்யவோ அல்லது அவர்கள் தங்களுடைய தோற்றத்தில் சிறிது நாகரிகமாக இருக்கும்படி வற்புறுத்தவோ யாரும் துணியக் கூடாது என்ற கண்டிப்பு இருந்தது. இப்போது மீனுட்சி, வைதிகத்துக்குப் பேர் போன மாயவரத்தில் உபாத்தியாயினியாகப் பணியாற்றப் போய் விட்டாள். அந்த இடத்தில் அவள் நடையுடை பாவனைகள் அவளுக்கு மிகவும் நல்ல பெயரைப் பெற்றுக் கொடுத்தன. தகாதது ஏதும் கற்றுக்கொண்டு விடுவார்களோ என்று பயந்து தம் பெண்களை இது வரை பள்ளிக்கு அனுப்பவே அஞ்சிய பிராமணப் பெற்றோர்கள், இப்போது அவர்களை மீனுட்சியிடம் நம்பி ஒப்படைக்கலாம் என்று உணர்ந்தார்கள்.

ஐஸ்ஹவுஸிலேயே இப்போது எழுபது பெண்களுக்கு மேல் தங்கினார்கள். மாதந்தோறும் புதிதாகச் சேருபவர்கள் வந்து கொண்டேயிருந்தார்கள். முடிவில்லாததும், அநேகமாகப் பொறுக்க முடியாததுமான வேதனைகள் நிறைந்த இந்த உலகில் இந்த இடம் ஒரு சந்தோஷத் திட்டாகத் திகழ்கிறது என்று வந்து பார்த்தவர்களெல்லோரும் அபிப்பிராயப்பட்டனர்.

1918—19ம் வருஷத்தில் மாரிகாலத்தில் இந்தியா ஒரு துக்கம் நிறைந்த தேசமாக இருந்தது. உலக யுத்தம் அதை நேரடியாகப் பாதிக்கா விட்டாலும், பஞ்சம், பிணி, சாவு ஆகியவை நாட்டை இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடி வரை தாக்கின. பலப்பல பிரதேசங்களில் வாழ்நாள் முழுதும் பசியால் வாடிய மனிதர்கள், இன்று பட்டினியால் மடிந்து கொண்டிருந்தனர். இன்ஃப்ளுயன்சா ஜுரம் உலகம் முழுவதும் பரவி, கோடிக் கணக்கான மனிதர்களைத் தாக்கியது. கொஞ்சம் குறைந்த அளவில் இந்த நோய் பரவிய இந்தியாவிலேயே நாற்றுமுப்பது லட்சம் ஜனங்கள் இறந்து விட்டார்கள். உலகயுத்தத்தில் இருதரப்பிலும் மடிந்தவர்களின் எண்ணிக்கை இதில் பாதி அளவுகூட இல்லை !

ஐஸ்ஹவுஸூம் இதிலிருந்து தப்ப முடியவில்லை. அநேகம் பேர்களிடம் இந்த ஜுரம் தொத்திக் கொண்டுவிட்டது. ஆயின், சித்தியினுடைய பராமரிப்பினாலும், ஆரோக்கியமான உணவினாலும் எல்லோரும் குணமடைந்து விட்டனர். அவர்கள் சிறிது சக்தி பெற்று நடமாட ஆரம்பித்த சமயத்தில், மகாத்மா காந்தி சென்னைக்கு வந்தார். அந்த விஜயமானது இந்த நாட்டின் வரலாற்றிலேயே ஒரு திருப்புமுனையாக அமைய விருந்தது. ஆனால் அப்போது வெகு சிலரே அதை உணர்ந்தார்கள்.

இந்தியர்களின் பிரஜா உரிமைகளைக் கட்டுப்படுத்தும் இரண்டு மசோதாக்கள் மத்திய சட்டசபையில் அனுமதிக்கப்பட்டிருந்தன. அதில் ஒன்று இப்போது சட்டமாக்கப்பட விருந்தது. சென்னையில் காந்திஜி தமது பழைய, புதிய நண்பர்களுடன் இந்த மசோதாக்களை எவ்வாறு தீவிரமாக எதிர்க்கலாம் என்பதைப் பற்றி ஆலோசனைகள் நடத்தினர். நாடு முழுவதிலும் ஹர்த்தால் நடத்துவது, துக்க நாள் கொண்டாடுவது, உண்ணுவிரதம் இருப்பது, பிரார்த்தனைகள் செய்வது என்று தீர்மானிக்கப்பட்டது. அவர்கள் இந்த முடிவுக்கு வந்ததற்கு முதல் நாள் மார்ச் 18ம் தேதி, சென்னை கடற்கரையில் பெரிய கூட்டம் ஒன்று நடைபெற்றது. ஐஸ்ஹவுஸ் ஜன்னல்கள் வழியே அதை நன்குகக் காண முடிந்தது. காந்திஜி அப்போது உடல்நலமின்றி இருந்தமையால் அவரது சொற்பொழிவு அவருடைய காரியதரிசியால் படிக்கப்பட்டது. மறு நாள் அது எல்லாப் பத்திரிகைகளிலும் பிரசுரமாயிருந்தது.

அவர் கூறியிருந்தார்: ''சில சமயம் நாம் ஓர் ஆன்மீகக் குரலுக்குக் கீழ்ப்படிய வேண்டிய நேரம் வரும். அதுதான் மிகவும் உன்னதமான குரல் — மனச்சாட்சியினுடைய குரல். அதற்கு அடிபணிகையில் ஒருவர் மிகுந்த துயருற்றுக் கண்ணீர் உகுக்க நேரலாம். அந்த ஒருவர் தம்முடைய நண்பர்கள், குடும்பம், சொந்த ஊர் — ஏன் உயிருக்குயிராக நேசித்த எல்லாவற்றையுமே — துறக்க நேரலாம்.''

இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு இந்தியர்கள் யாவரையும் தம் இயக்கத்தில் சேருமாறு காந்திஜி அழைத்தார். சாதாரணப் பிரஜைகள், சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் யாவருமே ஹர்த்தால் அன்று உண்ணுவிரதம் இருந்து வேலைநிறுத்தம் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

ஏப்ரல் 6ம் தேதியன்று நடந்த அந்த ஹர்த்தால் காந்திஜியின் தலைமையில் கீழ் தேசம் முழுவதும் ஒன்றுபட்டு நின்ற முதல் பெரிய இயக்கமாகும். இதிலேயோ அல்லது இதையடுத்து நிகழ்ந்த வேறு பல அரசியல் கிளர்ச்சிகளிலோ சுப்புலக்ஷ்மி பங்கெடுத்துக் கொள்ளவில்லை. சிறுமியாக இருந்தது முதல் தனது மனச்சாட்சியின் குரலுக்கே அடிபணிந்து அவ்வாறே செயல் புரிந்து வந்தவள் சுப்புலக்ஷ்மி. அவள் சர்க்கார் உத்தியோகத்தை ஏற்றுக் கொண்டதும் இந்த





## மாணவர் மகாநாடு

தமிழ்நாடு மாணவர் இந்தி ஆதிக்க எதிர்ப்பு மகாநாடு சென்னை ஒற்றைவாடை தியேட்டரில் மாணவர் தலைவர் திரு பெ.சீனிவாசன் தலைமையில் விமரிசையாக நிகழ்ந்தது. நாவலவன் அனைவரையும் வரவேற்றுப் பேசினார். இம் மகாநாட்டில் திரு நெடுஞ்செழியன், திரு கி. ஆ. பெ. விசுவநாதம், திரு ஜி. டி. நாயுடு, இலக்குவனார் முதலியவர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தனர். இந்தி எதிர்ப்புப் போரில் மாணவர்களுக்கு வெற்றி கிடைக்க ராஜாஜி ஆசிகூறினார்.



முறையிலேதான். அவள் வரையில் தேச சேவைக்கும், தான் செய்கிற தொண்டுக்கு மிடையே — அது சர்க்கார் உத்தியோகம் தான் என்றாலும் — முரண்பாடே இருக்க வழியில்லை. அவளுடைய முதல் கடமை தன்னை வந்து அடைந்திருந்த பெண்களின் முன்னேற்றத்துக்கு வழி செய்வதுதான்.

பிற்காலத்தில் அப்பெண்களுக்குப் பெரிய பொறுப்புக்கள் காத்திருக்கலாம். அவை எத்தகையனவா யிருந்தாலும் தயங்காமல் அவற்றை ஏற்றுச் சிறப்பாகச் செயலாற்றும் திறமை மிக்கவர்களாக விளங்கும் வகையில் அப்பெண்களை இன்று உருவாக்குவதே தான் தாய்நாட்டுக்குச் செய்யக்கூடிய சேவையாகும் என்று சுப்புலக்ஷ்மி தீர்மானமாக நம்பினாள்.

இன்ஃபுளுயன்ஸா ஜுரம் பரவியதன் பயனாக இந்தியா முழுவதும் அனேக சிறுமிகள் கைம்பெண்களாகி விட்டனர். சில பெண்களே ஐஸ்ஹவுசுக்கு அழைத்து வரப் பட்டார்கள் — துக்க சாகரத்திலிருந்து சில துளிகளை மட்டும் கொணர்வது போல். இருந்தாலும் இதுவரை விதவை இல்லம், அதில் சேர வருபவர்களின் எண்ணிக்கை அளவில், அடைந்து வந்த அபிவிருத்தியுடன் ஒப்பிடும் போது இப்போது அது கணிசமான முன்னேற்றம் கண்டு விட்டதாகத் தான் நினைக்கத் தோன்றியது. சேர வரும் பெண்கள் தொத்து வியாதியினால் பிடிக்கப் பட்டிருந்தாலோ அல்லது மூளைக்கோளாறு உள்ளவர்களாக இருந்தாலோ அன்றி, சகோதரி எந்தப் பெண்ணையும் திருப்பி அனுப்புவதில்லை.

இன்ஃபுளுயன்ஸாவினால் கைம்பெண்களாகிவிட்ட பெண்களில் சிலர் ஒன்றுமே தெரியாதவர்களாக இருந்தனர்.

ருக்மிணியை முதன் முதலாகப் பார்த்த போது, "இந்தப் பெண்ணுக்குப் படிப்புச் சொல்லித் தர முடியும் என்று நீ உண்மையாகவே நினைக்கிறாயா?" என்று மிஸ் டிரைஸ்டேல் சகோதரி சுப்புலக்ஷ்மியை நோக்கிக் கேட்டாள்.

ருக்மிணி என்ற பெயர் கொண்ட அந்தப் பெண் தொலைதூரத்திலுள்ள திருநெல்வேலி மாவட்டத்துக் கிராமம் ஒன்றிலிருந்து வந்திருந்தாள்.

சரஸ்வதி அம்மாள் — இவரும் ஒரு விதவைதான் — இன்று என்னிடம் கூறினார்: "ருக்மிணியை ஐஸ்ஹவுஸ் வரை அழைத்து வருவதற்குள் ஏற்பட்ட கஷ்டங்களும் தொல்லைகளும் பெரும் கதையாகும். அவற்றைப் பற்றி எழுதியே ஒரு புத்தகத்தை நிரப்பி விடலாம்."

ருக்மிணி இப்போது சரஸ்வதியின் அருகில்தான் அமர்ந்திருந்தாள். அவள் உட்கார்ந்திருந்த இடத்துக்கு நேர் மேலே ஒரு கஜ உயரத்தில் என்னுடைய ஜன்னல் இரைச் சீலையின் மீதாகக் கூடு கட்டிக் கொண்டிருந்த குருவிகளைப் போலவே சுறுசுறுப்பாகத் தோற்றமளித்துப் பேசினாள் ருக்மிணி.

"நடந்ததையெல்லாம் உங்களுக்கு ஏன் நான் சொல்லக் கூடாது?" என்றாள் அவள். தன் வாழ்நாளில் தான் ஒரு சொட்டுக் கண்ணீர்கூடச் சிந்தி அறியாதவள் போல் அவள் குரல் சந்தோஷம் நிரம்பியதாகத்

# தென்னிந்தியர்களின் சுவைக்கேற்றபடி பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்டது






# ஜி.பி
## பெருங்காயம்

**உயர்தர மிஸ்கி கலவை**
கோபால்ஜீ அண்டு கம்பெனி, 218, சாமுயல் ஸ்ட்ரீட், பம்பாய் 3

**ஏஜெண்ட்: தென் இந்தியா**
கோபால்ஜீ அண்டு கம்பெனி, 203, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, தபால் பெட்டி எண் 1255, மதராஸ்-1

**ஏஜெண்டுகள் தேவை—**
எல்லா முக்கிய பலசரக்கு கடைகளிலும் கிடைக்கும்.

## பருக்கள், கருப்பு மச்சங்கள், வேர்க்குரு மற்றும் சிறு சரும நோய்களுக்கு




# நிகோ
## கிருமிநாசினி சோப்

நிகோ, நிருபணமான மதிப்புடைய ஒரிஜினல் கிருமிநாசினி சோப்பாகும். நிகோ உங்களுக்கு மூன்றுவிதமாகப் பயனளிக்கிறது—சுத்தமாக்குதல், கிருமிநீக்குதல், பாதுகாத்தல்—உங்கள் சருமத்தைச் சுத்தமாகவும், ஆரோக்கியமாகவும், பருக்கள், கருப்பு மச்சங்கள் மற்றும் இதர சிறு சரும உபாதைகளிலிருந்து பாதுகாத்து, பத்திரமாகவும் வைத்திருக்கிறது. மேலும், நிகோ சோப் தேய்த்துக் குளித்தால், வேர்க்குருவில் இருந்து சுகமான நிவாரணம் பெற்று, புத்துணர்ச்சி அடையலாம்.





ஒவ்வொரு நாளும், உங்கள் சருமத்திற்குத் தேவையான பராமரிப்பை அளிக்கத் தவறாதீர்கள்.

**நிகோ — ஒரு பார்க்-டேவிஸ் தயாரிப்பு**




## சமயோசித புத்தி

தனக்கொரு சைக்கிள் வேண்டுமென்று வெகு நாட்களாகவே கேட்டு வந்தான் என் பையன்.

ஒரு நாள் செங்கொடிகளை ஏந்தியவாறு ஏராளமான தொழிலாளர்கள் ஊர்வலமாகப் போய்க் கொண்டிருந்தார்கள். இடையிடையே தங்கள் கோரிக்கைகளை முழக்கியும் முஷ்டிகளை உயர்த்தியும் தங்கள் ஆவேசத்தை வெளிப்படுத்தினார்கள்.

அதைக் கண்ட என் மகன் 'இது என்னப்பா?' என்றான். அதற்கு நான் 'அவர்கள் தொழிலாளர்கள். தங்களுக்குக் கூலி அதிகம் வேண்டுமென்று கேட்டபோது அவர்கள் முதலாளி மறுத்திருக்கிறார். உடனே வேலை செய்யாமல் கூலி அதிகம் கிடைப்பதற்காக இவ்விதம் கொடியை ஏந்திச்செல்கிறார்கள்' என்றேன்.

அன்று நான் காரியாலயத்திலிருந்து வீட்டுக்குத் திரும்பிச் சென்றபோது கண்டகாட்சி என்னைப் பிரமிக்க வைத்தது. எங்கிருந்தோ ஒருவெட்டுக் துணியை எடுத்து ஒரு குச்சியில் கட்டி வீட்டுக்கு முன் உட்கார்ந்திருந்தான் என் பையன். 'என்னடா இது?' என்று கேட்டபோது 'இன்கலாப் ஜிந்தாபாத்! சைக்கிள் எங்கே? சைக்கிள் கிடைத்தால்தான் எழுந்திருப்பேன்!' என்றான். அவனது கோரிக்கையை உடனடியாக நிறைவேற்ற முற்பட்டேன்.

பி. ஸ்ரீதரன், கேரளா.



தொனித்தது. "என்னிடம் என்றைக்குமே ரகசியம் ஏதும் இருந்ததில்லை. ஆகையினால் நான் சொல்வதையெல்லாம் நீங்கள் எழுதும் நூலில் சேர்த்துக் கொண்டாலும் பரவாயில்லை. நான் கூறுவது அனைத்தும் உண்மை."

அவளுக்குக் கல்யாணம் ஆகும்போது வயது பத்து. அவள் கணவனுக்கு இருபது வயது. அவன் மிகவும் புத்திசாலியான பையன். பிற்காலத்தில் நல்ல நிலையை அடையக் கூடியவன்தான். எப்போதும் கவலையற்று சந்தோஷமாக இருந்த ருக்மிணி புக்ககம் போகும் நாளை உற்சாகத்தோடு எதிர் பார்த்திருந்தாள். இன்னும் இரு வாரங்களில் அவளைக் கொண்டு விடுவதாயிருந்தது.

ருக்மிணியின் தாயார் மாப்பிள்ளைக்கும், சம்பந்திகளுக்கும் கொடுக்க வேண்டியவைகளை வாங்கி வரச் சென்னைக்குச் சென்றாள். ருக்மிணியும் அவள் தகப்பனாரும் வீட்டில் இருந்தார்கள். ருக்மிணியின் அத்தை (அவள் கணவர் யுத்தத்துக்குச் சென்று விட்டிருந்தார்) சமைத்துப் போட்டுக் கொண்டு குடும்பத்தை நிர்வகித்து வந்தாள். அவள் மிகவும் தெய்வபக்தி உள்ளவளாகையால், தன் கணவர் சௌக்கியமாகத் திரும்பி வர வேண்டும் என்பதற்காக நாள் முழுதும் பூஜையும் பிரார்த்தனையுமாக இருப்பாள். சிறுமி ருக்மிணியின் உள்ளத்தில் சந்தோஷம் நிரம்பிக் கொப்புளித்துக் கொண்டிருந்தது. அத்தை அவளுக்கு ஏற்ற தோழியாக இருக்க வில்லை. ஆயினும், ருக்மிணி அதைப் பொருட்படுத்த வில்லை. தான் சொல்வதில் எதையேனும் அத்தை செவிமடுத்துக் கேட்கிறாளா, இல்லையா என்றுகூடக் கவனியாமல் அவள் சந்தோஷமாக வம்பளந்த வண்ணம் இருந்தாள்.

ருக்மிணியின் கணவன் இம்பால் முன்னணியில் மிகவும் கடுமையாகத் தாக்கப்பட்டு, கவலைக்கிடமான நிலையில் இருப்பதாகத் திருவனந்தபுரத்திலிருந்து தந்தி வந்தது. அப்போது அவள் தாயார் சென்னையிலிருந்து திரும்பியிருக்க வில்லை. ருக்மிணியின் தந்தை உடனே திருவனந்தபுரத்துக்குச் சென்றார். ரயில் கிளம்பி நகரும் சமயத்தில் வீட்டுக்கு மற்றுமொரு தந்தி வந்தது. அந்தப் பையன் இறந்து விட்டான்!

ருக்மிணியின் அத்தை தந்தியைப் பிரித்துப் படித்துக் கதறி ஓலமிட ஆரம்பித்து விட்டாள். அந்த அம்மாளின் அழுகுரலைக் கேட்டு எல்லோரும், அவள் கணவர் தான் போர்முனையில் மடிந்து விட்டிருக்க வேண்டும் என்று துக்கம் விசாரிக்கக் கூடி விட்டனர். சின்னஞ்சிறுமியான தன் மருமகளுக்கு நேர்ந்த துக்கத்தினால் குழப்பமடைந்திருந்த அத்தை, வந்தவர்கள் நினைப்பது தவறு என்று விளக்கி வைக்கக்கூட முடியாமல் சிறிது நேரம் தவித்தாள். அத்தை தந்தியைப் பிரித்து உரக்கப் படிக்கும்போது கேட்டுக் கொண்டிருந்த ருக்மிணிக்கு முதலில் அழுவதா சிரிப்பதா என்றுகூடத் தெரிய வில்லை. விஷயத்தை உணர்ந்து எல்லாரும் அப்பெண்ணைச் சுற்றி நின்று அழ ஆரம்பித்த பிறகு அவளும் கதற ஆரம்பித்துவிட்டாள். நிறுத்தவே முடியவில்லை. அவளுக்கு ஒன்றும் சொல்லித் தர வேண்டியிருக்க வில்லை; எல்லாம் அவளுக்குத் தெரிந்தது தான். இன்னும் பத்து நாட்களில் தன் தலை கேசம் வாங்கப்படும், விதவைகள் உடுத்த வேண்டிய புடவைகளைத்தான் இனி அவள் அணிய வேண்டும்.

மறு நாள் அவளுடைய மாமா சென்னையிலிருந்து வந்தார். மாமாவிடம் ருக்மிணிக்கு மிகவும் பிரியம். அவர் அவளைத் தன்னுடன் மாடிக்கு வரும்படி அழைத்ததும் அவள் உடனே சென்றாள். அவர் அவளை ஓர் அறைக்குள் அழைத்துச் சென்று கதவை அடைத்துவிட்டு நிதானமாக அவளுடன் பேசலானார்.

(தொடரும்)



தூரத்திலிருந்து காணில்
அழகு...



அருகே நெருங்கினாலோ
கொஞ்சும் எழில்

ஆம், **லாக்டோ-காலமைன்** உபயோகித்தால்

இனி எழிலுடன் விளங்குங்கள்—லாக்டோ-காலமைன் ஒரு சிறந்த அழகுசாதனம்.சருமக்கோளாறுகளை மிருதுவாக்கும், மென்மையாகவும் செய்கிறது.

இனி என்றுமே எழிலுடன் மிளிருங்கள்—லாக்டோ-காலமைனில் சருமத்திற்கு நலம் தரும் காலமைன், விட்ச்ஹேஸல் இரண்டும் உள்ளன...சருமத்தைத் தூய்மையுடன் ஒளிரச் செய்கிறது.

**லாக்டோ-காலமைன் மூலம் எழிலுடன் ஒளி வீசுங்கள்.**




சருமக் கோளாறுகளைக்
களையும் ஒரே
அழகு சாதனப்
பொருள்

Benson/ 1-Cal- 9-TAM

# 'கல்கி' நினைவுச் சொற்பொழிவு

நாளொக்கு ஒரு மணி நேரம் வீதம் மூன்று நாட்களுக்குத் தொடர்ந்து ஒரு விஷயம் பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்திய போதிலும் அச்சொற்பொழிவாளர், தமது அபிப்பிராயம் இது என்று ஒரு கருத்தை வெளியிடாமலே தப்பித்துக் கொள்ள முடியும் என்பதைச் சமீபத்தில் புரிந்து கொண்டோம்! இத்தகைய ஒரு சிரமசாத்தியமான காரியத்தை வெற்றிகரமாக நிறைவேற்றி வைத்தவர் டாக்டர் இராசமாணிக்கனார் அவர்கள்.

சென்னை பல்கலைக் கழகத்தின் ஆதரவில் சென்ற மாத இறுதியில் நடைபெற்ற மூன்று நாள் கல்கி நினைவுச் சொற்பொழிவுகளையும் கேட்ட பிறகு இப்படி ஓர் எண்ணம் தோன்றிய போதிலும் சொற்பொழிவுகள் விறுவிறுப் போதும் சுவை குன்றாமல் சிறப்பாக அமைந்திருந்தன. திரு இராசமாணிக்கனாரது நுணுகி ஆராயும் திறனும் புலமையும் நன்கு புலனாயின. தமிழ் உரை நடை என்ற பொதுவான தலைப்பானதால் அவர் விளம்பரம் முதல் நாவல்கள் வரையில் எந்தப் பிரிவையுமே விட்டு வைக்கவில்லை! கடிதங்கள், அழைப்பிதழ்கள், கதைகள், கட்டுரைகள், அரசினரின் அறிக்கைகள் போன்ற பல அம்சங்களையும் தேடித் துருவி நோக்கி எத்தனையோ பல மேற்கோள்களுடன் தமது சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். அவ்வப்போது கேட்பவரிடையில் மென் நகையும் புன்னகையும் எழச் செய்து கலகலப்பை உண்டாக்கினார். நூற்றுக்கணக்கான நூலாசிரியர்களின் பெயர்களும் கணக்கற்ற புத்தகங்களின் பெயர்களும் அவரது பேச்சில் இடம் பெற்றன. அடேயப்பா! தமிழில் இவ்வளவு எழுதப்பட்டுள்ளனவா என்று நம்மை மலைக்க வைத்தன.

1901ஆம் ஆண்டு மதுரை தமிழ்ச் சங்கம் தோன்றிய நாள் முதல் 'கல்கி'யின் கடைசி நாவல் வரையில் உள்ள இடைக்காலத்தில் மறைந்த உரை நடை ஆசிரியர்களின் வாழ்ந்து வரும் இலக்கியப் படைப்புக்களைப் பற்றி பெல்லாம் விரிவாகக் கூறி வந்தார். இதற்கு விதிவிலக்காக பி. எஸ். ராமையா அவர்களின் பெயர் மட்டும் பேச்சிடையில் ஒரு முறை [illegible] அவரது உரை நடைக்கு உதாரணங்களாகச் சில பகுதிகளைப் படித்துக் காட்டினார்.



தமிழில் ஒன்றும் இல்லை என்பவர்கள் ஒரு பக்கமும் தமிழில் எல்லாம் இருக்கிறது என்பவர்கள் மறுபக்கமும் உரக்கப் பேசியும் அழுத்தமாக எழுதியும் நம்மைக் கலங்க அடித்து வரும் இன்று, தமிழில் உண்மையாகவே என்னென்ன இருக்கிறது என்று தெளிந்து கூறியதாலேயே என்னென்ன இல்லை என்றும் சுட்டிக் காட்டிவிட்ட இராசமாணிக்கனாருக்குத் தமிழன்பர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள். இந்நூற்றாண்டின் தமிழ் உரைநடையைப் பகுதி பகுதியாகப் பிரித்து அவர் தந்துள்ளார். இவற்றில் ஒவ்வொரு பகுதியுமே வருங்காலத்தில் விரிவான ஆராய்ச்சிக்கு உட்படத் தக்கதுதான்.

மூன்றாவது நாள், சொற்பொழிவு நிகழவிருந்த மேடை மீது கரும் பலகையும் 'சாக்பீஸ்'ம் எழுதியதைத் துடைத்து அழிக்கத் துணியும் வைக்கப்பட்டிருப்பதைப் பார்த்து 'இது என்னடா இவருக்குக் கல்லூரி வகுப்பறையின் நினைவு வந்துவிட்டதோ' என்று கூடியிருந்த பலர் கலங்கினார்கள். உண்மையாகவே அன்று இராசமாணிக்கனார் தமிழ் இலக்கண வகுப்பை நடத்தத் தொடங்கிவிட்டார்!

இன்றையப் பத்திரிகை உலகிலும் புத்தக உலகிலும் அச்சுப் பிழைகள், இலக்கணப் பிழைகள், அவசியமற்ற வடமொழிச் சொற்கள் இவை மலிந்து கிடப்பது அவரை வெகுவாக . வேதனைப்படுத்தியிருப்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது.

சொற்பொழிவுகளுக்குத் தலைமை வகித்த பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள், தமிழ் நூல்கள் அந்நிய மொழிகளில் பெயர்க்கப்படுவதில் நாம் காட்டிவரும் அக்கறை போதாது. இன்னும் அதிகமான அக்கறை காட்ட வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

இரண்டாம் நாளன்று இடையொன்று மின்சாரத் தொடர்பு அற்றுப்போய்விட்டது. அதனால் நேர்ந்த சிரமங்களைச் சிறிதும் பொருட்படுத்தாமல் இராசமாணிக்கனார் ஆர்வத்துடன் தமது ஆராய்ச்சி உரையை மெழுகுவத்திகளின் ஒளியிலேயே [illegible] படித்ததையும் அங்கு இருந்தோர் மின் விசிறியில்லாமையால் உடல் [illegible] பாராட்டாமல் [illegible] கேட்டதையும் நோக்குகையில் கல்கி நினைவுச் சொற்பொழிவு இம்முறையும் மிகச் சிறப்பாக நடந்தேறியது என்று முடிவு கட்டலாம் அல்லவா?

## முன் கதைச் சுருக்கம்

**நானூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு....**

குமரி முதல் கலிங்கம் வரையிலும் ஒரு குடையின் கீழ் கொண்டுவந்த கிருஷ்ணதேவராயர், விஜய நகரத்தில் வீற்றிருந்து ஆட்சி புரிந்து வருகிறார்.

மாலிக்காபூரின் படையெடுப்பால் சீரழிந்த தமிழ் நாட்டை அவரது ஆட்களிடமிருந்து மீட்டு, விஜய நகரத்தின் பாதுகாப்பின் கீழ்க் கொண்டுவந்திருந் தார்கள் கிருஷ்ணதேவராயரின் முன்னோர்கள். வெளிப்பகையிலிருந்து பாதுகாக்க விஜயநகரம் இருந்த காரணத்தால், உறையூரிலிருந்து ஆட்சி செய்த சிற்றரசன் வீரசோழன் உட்பகையை வளர்த் துப் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து மதுரை யைக் கைப்பற்றிக் கொண்டான்.

நாடிழந்த சந்திரசேகர பாண்டியர் சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயரிடம் முறையிடுவதற்காக விஜய நகரம் நோக்கிச் செல்கிறார். வழியில் அவரைச் சந்தித்த விஜயநகரத்து வீர இளைஞன் விசுவ நாதன் அவரைப் பத்திரமாக விஜயநகரத்துக்கு அழைத்துச் செல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்து விட்டுத் தான் மட்டிலும் முன்னால் விரைகிறான்.

நகரத்தின் எல்லையில் கருக்கிருட்டு நேரத்தில் யாரோ ஒருவர் விசுவநாதனை வழிமறித்து வாள் வீசுகிறார். வாட்போரில் அவரை முறியடித்த பிறகுதான் அவர் தன் தந்தை நாகம நாயக்கர் என்பது அவனுக்கே தெரிகிறது. தந்தையுடன் வந்திருந்த அவர் நண்பர் சாளுவ நரசிம்மரோ, தந்தையையும் மகனையும் மோத விட்டு வேடிக்கை பார்த்து மகிழ்கிறார்.



# வெற்றித் திருநகர்



## அகிலன்

விசுவநாதனின் தந்தை நாகம நாயக்கர் விஜய நகர சாம்ராஜ்யத்தின் தளநிகாரி. அவர் நண்பர் சாளுவ நரசிம்மரோ அப்போதுதான் அமைச்சராக உயர்த்தப்பட்டவர். வீரரான நாகம நாயக்கருக்குத் தன் நண்பர் சாளுவ நரசிம்மரின் விவேகத்தில் மிகுந்த நம்பிக்கை இருந்தது. எதையும் நண் பரின் ஆலோசனை கேட்டுச் செய்வதையே அவர் பழக்கமாக வைத்துக் கொண்டிருந்தார்.

விசுவநாதன் தன் உள்ளத்தைச் சாளுவ நரசிம்ம ரின் குமாரி லட்சுமியிடம் வெகு நாட்களாகவே பறி கொடுத்திருந்தான். ஆனால் அவளோ அவனது அடக்கமும் பணிவும் கொண்ட சுபாவத்தைத் தவறாகப் புரிந்து கொண்டு அவனை அலட்சியப் படுத்தி வந்தாள். அவன் தந்தையையே அவன் வாட்போரில் வென்றுவிட்டான் என்பதை அறிந்த பிறகுதான் அவன் மீது அன்பு செலுத்த முற் படுகிறாள் லட்சுமி. ஒரு நாள் தெருவில் அவன் குதிரையில் விரைந்து சென்றபோது குறுக்கே வந்து விழ விருந்த குழந்தையை அவன் காப் பாற்றிய நிகழ்ச்சி அவள் நெஞ்சில் பசுமையாகப் பதிந்து விடுகிறது. அதுவரையில் நீறுபூத்த நெருப்பாக இருக்கும் விசுவநாதனைத் தன் உள்ளத்தில் வைத்துப் போற்றுகிறாள்.

சந்திரசேகர பாண்டியர் வீரசோழனைப் பற்றிச் சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயரிடம் முறையிடு கிறார். அதே சமயம் வடக்கே டில்லியிலிருந்தும் சக்கரவர்த்தியின் உதவியைக் கோரி ஆட்கள் வருகிறார்கள். காபூலிலிருந்து பாபர் டில்லியின்மீது படையெடுத்து வருவதால் அவரை முறியடிப்பதற் காக ஹசன் கானும் ராணாசிம்மரும் சக்கரவர்த்தி யைப் படையோடு வடக்கே வரச் சொல்கிறார்கள். நாட்டின் வடக்கே வெளிப் பகையும், தெற்கே உட்பகையும் சூழ்வதைக் கண்ட சக்கரவர்த்தி இரண்டையுமே வெற்றி கொள்ள விரும்புகிறார்.

முதலில் தெற்கே தோன்றிய உட்பகையை அடக்கிப் பாண்டிய நாட்டை வீரசோழனிடமிருந்து மீட்டுச் சந்திரசேகர பாண்டியரிடம் கொடுத்து வரும் படி விசுவநாதனின் தந்தை நாகம நாயக்கரை மதுரைக்கு அனுப்பி வைக்கிறார்.

வடக்கே பாபரை முறியடிப்பதற்காகத் தமது அண்டை நாடுகளான பாமினி நாடுகளை ஒன்று திரட்ட முயல்கிறார் சக்கரவர்த்தி. அவருடைய அமரநாயக்கர்களோ அந்த முயற்சி வெற்றி



பெறுதபடி, அண்டை நாடுகளின் ஒத்துழைப்பைப் பெற முடியாமல் செய்துவிடுகிறார்கள். அதனால் மனம் வருந்திய சக்கரவர்த்தி தாமே தனியாக வடக்கே படை நடத்திச் செல்ல தீர்மானித்த சமயத்தில் பாபர் டில்லியைக் கைப்பற்றி அதன் சுல்தானைக் கொன்றுவிட்டார் என்ற செய்தி கேட்டு அதிர்ச்சி அடைகிறார். அந்த அதிர்ச்சியோடு அவர் குதிரையில் விரைந்து குன்றுகளிடையே சென்றபோது, குதிரையிலிருந்து விழுந்து விபத்துக்குள்ளாகிறார். விபத்துக்குள்ளான நிலையிலும் அவர் தமது மருமகன் ராமராயரை வடக்கே ஆயுதங்களோடும், உணவுப் பொருள்களோடும் அனுப்பி வைத்து, பாபரை எதிர்க்கத் துணிந்து நின்ற ராணா சங்காவுக்கு உதவச் செய்கிறார்.

கிருஷ்ணதேவராயரை அவரைச் சார்ந்தவர்களே புரிந்து கொள்ளவில்லையென்றாலும், அவருடைய அன்புக்குப் பாத்திரமான விசுவநாதன் புரிந்துகொள்கிறான். பாரத கண்டத்தின் செல்வச் செழிப்பைக் கண்ட வெளி நாட்டினர் தரை வழியாகவும், கடல் வழியாகவும் அதன்மீது தொடர்ந்து படையெடுக்கத் துணிந்துவிட்டனர். சின்னஞ்சிறு நாடுகளாகப் பிரிந்து, அதன் அரசர்கள் தங்களுக்குள் ஒற்றுமையின்றிப் போரிட்டுக் கொண்டிருந்ததால் படையெடுத்து வந்தவர்களுக்கு இது சொர்க்க லோகமாகவும், இங்கு வாழ்ந்தவர்களுக்கு நரக லோகமாகவும் மாறிக் கொண்டுவந்தது. ஆகவே, மத இன வேறுபாடுகளைப் பொறுத்துக் கொள்ளும் பரந்த நோக்கமுள்ள வலிமையான சாம்ராஜ்யமாக விஜயநகரம் விளங்க வேண்டுமென்று பாடுபட்டார் கிருஷ்ணதேவ ராயர்.





# பிரிட்டானியா

# கோல்டன் பஃப்




பிரிட்டானியாவினுல் பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட கோல்டன் பஃப் பிஸ்கட்டுகள், புத்தம் புதியவை, முறுகலானவை, புஷ்டிச் சத்தும் உள்ளவை. டீ அல்லது காபி அருந்தும்போது, ஜாம், வெண்ணெய், அல்லது பாற் கட்டியுடனே தின்பதற்கு மிகச்சிறந்தவை. அவற்றை பரீட்சை செய்து பாருங்கள்—வாயில் போட்டதும் கரைந்து போகின்றன. இன்றே கொஞ்சம் வாங்கி, பிரிட்டானியா கோல்டன் பஃப் பிஸ்கட்டுகளின் புத்தம் புதிய சுவையின்பத்தை அனுபவியுங்கள்.





வெளிநாடுகளிலும் புகழ் பெற்றது



அவரும் காசி யாத்திரை போய் வந்தோம். இதற்காகவா போய் வந்தோம்?'' என்று அவனிடம் கதறினார் கமலா தேவி. ''உன் மேல் உன் அப்பா உயிரையே வைத்திருக்கிறார்; உனக்காகவே அவர் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறார். வேண்டாம்! அவருடைய மனத்தைப் புண்படுத்தாதே!'' என்று விசுவநாதனிடம் கெஞ்சினார் அவர்.

சக்கரவர்த்தி கிருஷ்ணதேவ ராயரிடம் தாமே சென்று முறையிடப் போவதாகவும் தம்முடைய கணவருக்கெதிராக மைந்தனை அனுப்ப வேண்டாம் என்று வேண்டிக் கொள்ளப் போவதாகவும் அவர் கூறினார். அப்படிச் செய்வதற்காக அவர் அமைச்சர் சாளுவ நரசிம்மரின் துணையை நாடக் கூடும் என்பதும் விசுவநாதனுக்குத் தெரிந்தது.

''அம்மா! அப்படி ஏதாவது நடந்தால், நீங்கள் என்னை உயிரோடு இழந்துவிடவேண்டிய அவசியம் ஏற்படும். உங்களுக்குள்ள மனவேதனை எனக்கும் உண்டு. உங்களையும் நான் இழந்துவிட்டால் பிறகு எனக்கு வேறு ஆதரவில்லை. நீங்களும் அவசரப்பட்டு என்னை இழந்துவிட வேண்டாம்'' என்று ஒரு முறை கமலாதேவியிடம் குமுறினான் விசுவநாதன்.

கமலாதேவி இதைக் கேட்டு நடுங்கினார். விசுவநாதனின் பிடிவாதம் அவருக்குத் தெரியும்.

''அம்மா! என் போக்கில் என்னை விட்டு விடுங்கள். பொறுப்போடு சிந்திக்கும் வயது எனக்கு வந்து விட்டது. நான் உங்களுக்கோ அப்பாவுக்கோ மனதாரத் துரோகம் செய்யவில்லை. நாட்டுக்கும் சக்கரவர்த்திகளுக்கும் துரோகம் செய்து வாழ்ந்தோம் என்ற பழிச் சொல் நம்முடைய குடும்பத்துக்கு வர வேண்டாம். அந்தப் பழிச் சொல்லைத் துடைப்பதும் என்னுடைய கடமை என்று உணர்கிறேன்'' என்றான்.

கமலாதேவியால் அவன் போக்கைச் சிறிது கூடப் புரிந்து கொள்ள முடியவில்லை. பெற்று வளர்த்த பாசத்தீ ஒருபுறமும் கணவரிடம் அவர் கொண்டிருந்த பேரன்பு மறுபுறமும் அவர் நெஞ்சைக் கசக்கிப் பிழிந்து வந்தன. நடக்கவும் சக்தியின்றிப் படுக்கையில் சாய்ந்து விட்டார் அவர்.

விசுவநாதன் இரவெல்லாம் தனக்குள் கண்ணீர் வடிப்பதை வழக்கமாகக் கொண்டு விட்டான். தன்னுடைய நாட்டுக்காகவும் தந்தைக்காகவும் அன்னைக்காகவும் அவன் அழுதான். அவனுக்கு ஆறுதல் கூறக்கூடியவர்கள் இருவர். அவர்களில் அரியநாத முதலியார் படைகளைத் திரட்டி வருவதற்காக நாட்டுப் புறத்துக்குச் சென்று விட்டார். லட்சுமியையோ அவனால் சந்திக்கவே முடியவில்லை.

கமலாதேவி அமைச்சரின் மாளிகைக்கு அடிக்கடி சென்று வந்தாரே தவிர, அங்கிருந்து யாரும் அவருடைய மாளிகைக்கு வரவில்லை. லட்சுமிக்குத் திடீரென்று உடல் நலம் சரியாக இல்லை என்ற செய்தியை மட்டுமே கமலாதேவி கூறினார். லட்சுமிக்கு ஏன் உடல்நிலை சரியில்லை என்பதற்கான காரணத்தையும் அவர் விசுவநாதனிடம் மறைக்கவில்லை. அவன் செய்த முடிவின் அதிர்ச்சி தாங்காமல் லட்சுமியும் செயலிழந்துவிட்டாள் என்பதை அவர் அவனிடம் சுத்திக் காட்டினார்.

நினைத்தபோதெல்லாம் அவனால் லட்சுமியைச் சந்தித்துப் பேச முடிந்த நாட்கள் திடீரென்று இப்போது மறைந்து விட்டன. யாருடைய மாளிகைக்கு அவன் குழந்தைப் பருவம் முதல் உரிமையுடன் ஓடி விளையாடி வந்தானோ அவருடைய மாளிகைக்கே அவ

---

## ஓவியத்துக்கு ஒரு கவிதை

கவிஞனின் சொற்களிலே ஓவியம் உருவாகிறது என்றால், ஓவியனின் தூரிகை தீட்டும் ஓவியம் காவியத்துக்கு வித்திடுகிறது. கம்பரும் காளிதாஸரும் இந்தப் பொய்யாமொழிக்குச் சான்றாகத் திகழ்கிறார்கள். சிறந்த காவியப் பரம்பரையிலே வந்த நாடு நம் பாரத நாடு. பாமரரும் காவிய உள்ளம் படைத்தவர்களாகத் திகழும் நாடு நம் நாடு.

பாரதியின் பரம்பரையிலே எத்தனையோ கவிகள் குடத்துள் விளக்காக இருப்பார்கள். அவர்களுக்கும் ஒரு வாய்ப்பு அளிக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு, ஓவியக் கலைஞர் மணியம் அவர்களை ஒரு சித்திரம் தீட்டச் சொல்லி அட்டைப்படமாக வெளியிட்டிருக்கிறோம். பௌர்ணமி நிலவும், நிலவனைய முகமும், பாய்மரப் படகும், தூரத்தே தெரியும் தென்னைகளும் மனிதனது கற்பனையைச் சிறகு கட்டிப் பறக்க வைக்கின்றன. ஓவியத்தைக் காவியமாக்கும் திறன் படைத்தவர்கள் 'கல்கி'யில் அரைப் பக்கத்துக்கு மேல் போகாமல் சிறந்த **கவிதைகளை** எழுதி அனுப்பக் கோருகிறோம். சிறந்த கவிதை 'கல்கி'யில் சிறப்பாக இடம் பெறுவதுடன் வழக்கமான பரிசையும் பெறும். கவிதை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி 25-3-66.

**உறையின் மேல் ''ஓவியத்துக்கு ஒரு கவிதை'' என்று குறிப்பிடவும். இது விஷயமாகக் கடிதப் போக்கு வரத்து வைத்துக்கொள்வதற்கில்லை. பிரசுரமாகாதவற்றைத் திரும்பப் பெற விரும்புவோர் தங்கள் விலாசமிட்ட தபால் தலையுடன் கூடிய ஓர் உறையை உடன் அனுப்ப வேண்டும்.**



னுக்கு இப்போது அனுமதி மறுக்கப்பட்டது. அந்த ஒரு நிகழ்ச்சியை மட்டிலும் அவனல் தாங்க முடியவில்லை; தாங்கவே முடியவில்லை.

அரண்மனைக்குச் செல்லும்போதும் அங்கிருந்து திரும்பும்போதும் அவனுடைய விழிகள் தாமாகச் சாளுவ நரசிம்மரின் மாளிகைப்பக்கம் திரும்புவதுண்டு. வாயிலில் நிற்கும் காவலர்கள் மட்டிலுமே அவன் கண்களில் படுவார்கள். 'லட்சுமியுமா அடியோடு மாறிவிட்டாள்? அப்படி நான் என்ன குற்றம் செய்துவிட்டேன்?' — பெருமூச்சு விட்டபடியே தலையைக் குனிந்து கொண்டு மேலே செல்வான் விசுவநாதன்.

எந்தக் காவலர்கள் அவனைப் பயபக்தியோடு அந்த மாளிகைக்குள் உற்சாகமாக வரவேற்றார்களோ, அவர்களே அவனைப் பரிகாசத்தோடு நோக்குவது போல் அவனுக்கொரு பிரமை ஏற்பட்டது. அந்தப் பக்கம் திரும்பிப் பார்ப்பதையும் நிறுத்திக் கொண்டு விட்டான் அவன்.

அவனுடைய படைகள் விஜயநகரத்துக்கு வந்து குவிந்து கொண்டிருந்தன. புறப்பட வேண்டிய நாளையும் அவனிடம் குறிப்பிட்டுச் சொல்லிவிட்டார் சக்கரவர்த்தி. விசுவநாதன் அரியநாத முதலியாரின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். இடையில் ஒவ்வொரு நாள் கழிவதும் ஒரு யுகமாகத் தோன்றியது அவனுக்கு.

ஒரு நாள் பிற்பொழுதை அவன் தன்னுடைய தனிமைக்காக ஒதுக்கிக் கொண்டான். துங்கபத்திராவின் மறு கரைக்குச் சென்று, சிறிது நேரம் தனித்திருந்து வந்தாலாவது ஓரளவுக்கேனும் அமைதி கிடைக்காதா என்ற ஏக்கம் அவனுக்கு. பாலத்தின் வழியாகக் குதிரையில் சென்று, குன்றுகளிடையே ஒரு புதரில் குதிரையைக் கட்டிவிட்டு, வழக்கமாகச் செல்லும் அந்த இடத்தை நோக்கிச் சென்றான். நினைவு அவனிடமில்லை. பழகிப் போன கால்கள் அவனை அங்கே சுமந்து கொண்டு சென்றன.

அருகே நெருங்கும் சமயத்தில் யாரோ ஒரு பெண் அங்கே தேம்பி அழும் ஒலி கேட்டது. திடுக்கிட்டுச் சிறிது நேரம் நின்றுவிட்டு அவன் மெல்ல நடந்தான். தேம்பலும் அழுகையும் ஓயவில்லை. சில விநாடிகளுக்கெல்லாம் அவன் அங்கே கண்ட காட்சி அவனை நெக்குருகச் செய்தது. வேர்விட்ட மரம் போல் அப்படியே நின்று விட்டான்.

வழக்கமாக அவன் அமர்ந்து பேசும் பாறை மீது சாய்ந்து அதைக் கண்ணீரால் கழுவிக் கொண்டிருந்தாள் லட்சுமி. அவளுடைய தோற்றத்தில் அவன் கண்ட மாறுதல் அவனை என்னவோ செய்தது. ஒருசில தினங்களுக்குள் எப்படி உருமாறிப் போயிருந்தாள் அவள்!

''லட்சுமி!'' என்று குமுறினான் விசுவநாதன்.

சட்டென்று அவனைத் திரும்பிப் பார்த்த அவள், அவன் தோற்றத்தை நம்பாதவள் போல் ஒருகணம் வெறித்து நோக்கினாள். பிறகு எழுந்து ஓடோடியும் வந்து அவன் கால்களைப் பற்றிக் கொண்டு கீழே விழுந்தாள். அழுகையும் தேம்பலும் அடக்க முடியாத அளவுக்கு அவளை ஆட்டிப் படைத்தன.

''கொன்று விடுங்கள்! என்னை இப்போதே கொன்று விட்டு நீங்கள் மதுரைக்குப் படையெடுத்துச் செல்லுங்கள்! உங்கள் கரத்தாலேயே என்னை இந்தத் துங்கபத்திராவில் தள்ளி விடுங்கள்!''

விசுவநாதன் அவளுக்கு ஆறுதலளிக்க முயன்றான். மெல்ல அவளைப் பற்றித் தூக்கி நிறுத்தினான். அவளோ அவன் கரம் தன்னைத் தீண்ட விரும்பாதவள் போல் அதை உதறித் தள்ளிவிட்டு விலகிச் சென்றாள். ஆற்றை நோக்கி விரைந்தோடினாள். மூழ்குவதற்கே துணிந்து விட்டவள் போல் அவள் வெறி கொண்டு ஓடினாள்.

விசுவநாதன் முரட்டுத்தனமாக அவளைத் தடுத்து நிறுத்திவிட்டு, அந்தப் பாறையின் அருகே இழுத்து வந்தான்.

''லட்சுமி! நீயும் இந்தச் சமயத்தில் என்னைக் கைவிட்டு விடாதே!'' என்று அவன் கெஞ்சிய போது, அருகில் ஓடிய துங்கபத்திரா அவன் கண்களின் வழியே பாய்ந்தோடியது.

(தொடரும்)



## போக்கிரிப் பயல்!



மணிக்கு வயிற்றுக்குச் சுகமில்லாமல் இருந்தது. நாட்டு வைத்தியரிடம் காட்டியதில் 'அவனுக்கு விளக்கெண்ணெய் கொடுங்கள். இரண்டு மூன்று முறை பேதியானல் எல்லாம் சரியாகி விடும்' என்றார்.

காலையில் மணியை எழுப்பி, பாலில் விளக்கெண்ணெயைக் கலந்து, குடிக்கும்படி கூறினேன். அவன் வழக்கம் போல் 'அப்பாக்கு' என்றான். அதைக் கேட்ட என் கணவர், 'சரி எனக்கும் கொஞ்சம் தா' என்றார். 'மணி பிடிவாதம் பிடிக்காமல் குடித்தால் சரி' என்று அவருக்கும் கொஞ்சம் கொடுத்தேன். 'மணி! நான் எப்படிக் குடிக்கிறேனே, அதைப் போல் சமர்த்தாய்க் குடி' என்றபடியே, கையில் உள்ள துண்டை வாயருகில் வைத்துக் கொண்டு குடித்தார். அதைப்போலவே மணியும் துண்டை வைத்துக் கொண்டு குடித்தான். 'சரி மணி குடித்தாயிற்றல்லவா? இன்னைக்குப் போகலாம்' என்று கூறியபடியே எழுந்திருந்தவர், 'சரஸ்வதி, விளக்கெண்ணெயைத் துண்டுலாக்கும் கொட்டினேன். நன்றாய்த் தோய்த்துப் போடு' என்றார். உடனே எங்கள் மணியும் 'நானும் அப்படித்தான் அம்மா!' என்றானே பார்க்கலாம். அவன் துண்டைப் பார்க்க எனக்குக் கோபமா, சிரிப்பா? என்ன வந்திருக்கும்?

கே. எஸ். சகுந்தலா ராமநாதன், [illegible]



தமிழிலும் விஞ்ஞானப் படங்கள் வர வேண்டாமா? வளர வேண்டாமா? படத் தயாரிப்பாளர்கள் இந்தக் கட்டுரையாளரின் யோசனையைச் செயலாக்கினால் தமிழ்த் திரை உலகம் பாரதத்துக்கே ஒரு வழி காட்டியாக அமையும் என்பதில் ஐயம் இல்லை.

# எம். ஜி. ஆர்

சில மாதங்களுக்கு முன்னால் ஒரு நாள். நான் தாஸப்பிரகாஷ்' ஹோட்டலில் வெடிக்கும் எரிமலை மீது உட்கார்ந்திருந்தேன். நான் மட்டுமென்ன, என்னைப் போன்ற இன்னும் பல பத்திரிகையாளர்களும் சில பிரமுகர்களும் கூடத்தான்!

அமெரிக்காவிலிருந்து வந்த விஞ்ஞானத் துணுக்குப் படங்கள் சில அன்று அங்கு திரையிடப்பட்டன. அவற்றில் ஒன்று உலகம் உருவான கதையை விளக்கியது. எரிமலைகள் வெடித்தன, கடல் பொங்கியது. நிலம் கிடுகிடுத்தது.

இன்னும் ஏதேதோ இயற்கை மாறுதல்கள் உண்டாகி அக்கினிக் கோளமாக இருந்த இப்பூமியைப் பலப் பல ஜீவராசிகளும் தாவரங்களும் வாழத் தகுதியுடையதாக்கின. இன்னும் ஒரு துணுக்குப் படம். ஒரு தேரையைப் பற்றியது. ''திருவாளர் தேரை கிளம்புகிறார்'' என்று பெயரிட்டுக் குழந்தைகளுக்கு எளிதாகப் புரியும்வண்ணம் சிறப்பாக எடுக்கப்பட்டிருந்தது. இப்படியே, 'வெள்ளணுக்களின் உபயோகம்', 'தோட்டத்தில் செடிகளுக்கு நன்மை அல்லது தீமை விளைவிக்கும் பூச்சிகள்' போன்ற பல விஷயங்களைப் பற்றிய அதியற்புதமான துணுக்குத் திரைப் படங்கள் காண்பிக்கப்பட்டன.

சென்னையில் ஒரு வாரமோ பத்து நாட்களோ இந்தப் படங்களைச் சில தியேட்டர்களில் திரையிட்டார்கள். டிக்கெட்டுகளுக்கு ஏகக் கிராக்கி. பார்க்க விரும்பிய அத்தனை மாணவர்களையும் நிர்வாகிகளால் திருப்திப் படுத்த முடியவில்லை.

என்றோ ஒரு நாள் ஒன்றிரண்டு விஞ்ஞானத் துணுக்குப் படங்களைச் சென்னையில் உள்ள மாணவர்களில் ஒரு சிறு பகுதியினர் மட்டும் பார்த்து விட்டால் போதுமா? உன் நாட்டில் கிராமங்களிலும் சிற்றூர்களிலும் பட்டணங்களிலும் உள்ள ஆயிரமாயிரம் இளைஞர்கள் பார்த்துப் பயன் பெற வேண்டாமா? எத்தனைதான் புத்தகங்களைப் படித்து உருப்போட்டு மண்டையை உடைத்துக் கொண்டாலும் அவ்விஷயத்தையே ஸினிமாவாக நேரில் கண்டு கேட்பதற்கு ஈடாகாது என்று அறிஞர்கள் அடித்துச் சொல்கிறார்களே! விஞ்ஞானத் தத்துவங்களைச் ஸினிமாவாகக் காண்பித்தால் எளிதில் புரியும். சுலபத்தில் மனத்தில் பதியும் என்

இருர்களே! இந்த அரிய அநுபவத்தைத் தமிழகத்தில் உள்ள எண்ணற்ற இளைஞர்கள் அடையக் கூடாதா ?

இன்றைய தமிழ் சினிமா உலகம் மாணவர்களால் பெரிதும் பயனடைகிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. சினிமாவுக்காகப் பணம் செலவழிக்காத மாணவன் ஆயிரத்தில் ஒருவன்கூட இருப்பானா என்பது சந்தேகம். அவ்விதமிருக்க இன்றைய தமிழ்த் திரை உலகம் நம் மாணவ மாணவிகளுக்காக, இந்நாட்டின் எதிர்காலச் செல்வங்களுக்காக உபயோகமாக என்ன செய்திருக்கிறது?

மூன்றரை மணி நேரம் ஓடும் ஒரு படத்தில் அனாவசியமான ஒரு சில காட்சிகளை நீக்கி மூன்று மணி நேரத்துக்குக் குறைத்துக் கொண்டால் ஒன்றும் குடிமுழுகிப் போய் விடாது. படம் இதனால் அதிக விறுவிறுப்பு அடைந்து நன்றாகவே இருக்கும். இப்படி அரை மணி நேரப் படப் பகுதியைக் குறைத்ததால் மிஞ்சும் பொருள் செலவு, கச்சா பிலிம் இவற்றைக் கொண்டே பத்துப் பத்து நிமிஷங்களுக்கு ஓடக் கூடிய இரண்டு விஞ்ஞானத் துணுக்குப் படங்களை எடுக்கலாம்.

செல்வாக்கை அவர்கள் பயன்படுத்தி, 'இந்தக் கதைப் படத்துடன் இரண்டு தரமான விஞ்ஞானத் துணுக்குப் படங்களை எனக்குத் திருப்தியளிக்கும் வகையில் நீங்கள் எடுப்பீர்களா?' என்று அவர்கள் படாதிபதியைக் கேட்க வேண்டும்.

திரு எம். ஜி. ஆர். அல்லது சிவாஜி கணேசனின் இந்தக் கோரிக்கைக்குச் செவி சாய்க்கமாட்டேன் என்று சொல்லச் சம்பந்தப்பட்ட யாருக்கும் துணிவு வராது என்பது உறுதி. இந்தப் புனிதப் பணியை இவ்விருவரும் தொடங்கி வைத்தால் மற்றவர்களும் பின்பற்றுவார்கள். பாரதம் முழுவதிலும் படாதிபதிகள் இம்மகத்தான மாறுதலை ஏற்பார்கள். இத்துறையில் வழி காட்டிய பெருமை தமிழ்த்திரை உலகுக்குக் கிடைக்கும்.

விஞ்ஞானப் படங்கள் எடுப்பதற்கெல்லாம் நம்மிடம் தகுதியான ஆட்கள் இல்லை என்று கூறித் தட்டிக் கழித்துவிடக் கூடாது. நம்மிடையே சிறந்த விஞ்ஞானிகள் உள்ளனர். பெரிய விஞ்ஞான உண்மைகளை எளிய நடையில் அழகாகச் சிறுவர் சிறுமியருக்கும் புரிகிற மாதிரி கதை போல் எழுதித் தர

# அவர்களுக்கு ஒரு வேண்டுகோள்!

அதிகச் செலவு ஆகாது. அதே சமயத்தில் பெருமிதத்துக்குரிய உபயோகமான காரியம் ஒன்றைச் சாதித்ததாகும். இதனால் எல்லாத் தியேட்டர்களிலும் ஒவ்வொரு புதிய கதைப் படம் தவிர இரு விஞ்ஞானத் துணுக்குப் படங்களும் நிச்சயமாகக் காண்பிக்கப்படும். இது தமிழகத்தின் கல்வி முன்னேற்றத்தில் எத்தகைய ஒரு புரட்சிகரமான அபிவிருத்தியை ஏற்படுத்தும் என்று கூறவும் வேண்டுமா? 'சினிமாவுக்குப் போகாதே!' என்று இன்று பிள்ளைகளைத் தடுக்கும் பெற்றோர்கூட அந்நிலையில், 'சினிமாவுக்குப் போடா' என்று சந்தோஷமாகச் சொல்லி அனுப்புவார்களே!

இன்று எம். ஜி. ஆர். அவர்களும், சிவாஜி கணேசன் அவர்களும் பெரிய கொடையாளர்கள் என்று பேர் பெற்றிருக்கிறார்கள். எத்தனையோ நல்ல காரியங்களுக்கு உதவுகிறார்கள். ஆனால் கல்விதானத்துக்கு ஈடாக எது இருக்க முடியும்? அவர்கள் இதுவரை செய்துள்ள எத்தனையோ தான தருமங்களையெல்லாம்விட இது மிகச் சிறந்த உதவியாக அமையும். இதைவிடப் பெரிய சேவையை அவர்கள் இன்றைய இளைஞர் சமுதாயத்துக்குச் செய்யவே முடியாது ! இருவருமே இன்று திரை உலகில் சர்வ வல்லமை பொருந்தியவர்கள். தங்களுக்குள்ள

எழுத்தாளர்கள் இருக்கிறார்கள். அவற்றைப் படமாக்க நல்ல 'டெக்னீஷியன்'களும் உண்டு. இவர்களைப் பயன்படுத்திப் பல அற்புதங்களைச் சாதிக்க முடியும்.

சமீபத்தில் மொராக் ஸ்தாபனத்தாரின் துணுக்குப் படங்கள் சிலவற்றைப் பார்க்க நேர்ந்தது. இவற்றைத் தயாரிப்பதில் முக்கிய பங்கெடுத்துக் கொண்டிருப்பவர் டைரக்டர் கே. சுப்பிரமணியத்தின் புதல்வர் திரு எஸ். கிருஷ்ணஸ்வாமி. அமெரிக்காவில் கொலம்பியா சர்வகலாசாலையில் திரைப் படக் கலை பற்றிக் கற்றறிந்து திரும்பியுள்ள இவர் தயாரித்துள்ள இப்படங்களில் அரிய விஞ்ஞான உண்மைகள் தெளிவாக்கப்பட்டிருப்பதைக் கண்டு மகிழ்ந்தேன். இவற்றில் ''மால்கோவின் கதை'', ''கேரள மீனவர்கள்'' ஆகியவை மிகச் சிறந்தவை. இவை, விஞ்ஞான உண்மைகளைப் படமெடுக்கும் ஆற்றல் உள்ள ஆட்கள் தமிழகத்தில் இல்லாமல் போகவில்லை என்பதைக் கண்ணுக்கு மெய்யாக நிரூபித்துக் காட்டுகின்றன.

ஊக்கம் அளிக்கப்பட்டால் திரு கிருஷ்ணசாமியைப் போன்று எத்தனையோ இளைஞர்கள் இத்துறையில் பாடுபட முன்வரலாம்.

—குட்டி கிருஷ்ணன்





# மனத்துக்கு உகந்தவள்

புஷ்யன்

இதுவரையில் ஆண்களையன்றிப் பெண் வாடையே வீசாத எங்கள் அலுவலகத்தில் திடீரென்று பெண்களையும் வேலைக்கு அமர்த்திக் கொள்வதென்று தீர்மானித்திருந்தார்கள் எங்கள் கம்பெனியின் டைரக்டர்கள். எங்கள் கம்பெனியின் விஸ்தரிப்பின் காரணமாக அலுவலகத்துக்குப் புதிதாக வேலைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட இருபத்தி ஐந்து பேர்களில் அறுவர் பெண்கள். எங்கள் அலுவலகத்தில் பணி புரியும் அத்தனை பேருக்கும் — பியூனிலிருந்து தலைமைக் குமாஸ்தா வரை, வாலிபர் முதல் ரிடையராகப் போகும் கிழவர்கள் வரையில் ஒரே பரபரப்பு, துடிதுடிப்பு, உற்சாகம்.

வேலைக்குத் தேர்வு வந்த தினத்திலிருந்து தேர்வுக்குப் பதினைந்து பேர்கள் பெண்கள் வந்திருந்தார்கள் — கடைசியாக ஆறு பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு வேலையில் அவர்கள் வந்து சேரும் வரை, அவர்கள் ஒவ்வொருவரைப் பற்றியும் விமரிசனங்கள் நடைபெற்றன எங்கள் அலுவலகத்தில்.

ஆறு பேர்களில் ஒருத்தி வெட வெடவென்று ஒடிந்து விழுவதுபோல், மூக்குக் கண்ணாடி அணிந்திருந்தாள். விழித்துப் பார்க்கும் போது, பயங்கரமாய் இருந்தது. இன்னொருத்தி அதற்கு நேரெதிர். குண்டுக் கட்டை. நடக்கும் போதே மாடி அதிர்ந்தது. மூன்றுமவள் நடக்கும் போது இப்படியும் அப்படியும் ஆடி நடந்தாள். லேட்டஸ்ட் பாஷன். தினத்துக்கொரு பின்னல்,—கொண்டை. வந்த முதல் நாளே வளவளவென்று எல்லோருடனும் பேச ஆரம்பித்து விட்டாள். இந்தக் கும்பலில் கலக்காமல் இருந்த அந்த ஒருத்தியைக் கண்டதுமே என் உள்ளத்தில் ஏதோ ஓர் உணர்ச்சி உண்டாயிற்று. இந்தக் காலத்தில், எந்தப் படித்த பெண் உடலை அசைக்காமல் நடக்கிறாள்? ஆனால், அந்தப் பெண் அதற்கு விதி விலக்கு. படித்த பெண், வேலைக்கு வரும் ஒரு பெண்ணாகவே அவள் தென்படவில்லை. ஒரு சித்திரப் பதுமை நடந்து வருவது போல் வருவதைக் காணும்போது என் உள்ளம் ஏதோ ஒரு பெருமிதம் அடைந்தது. காதில் தொங்கட்டான் அணிந்திருந்தாலும், அதுகூட அசையாமல் அவள் நடந்தாள் என்றால் அவள் நடை எப்படியிருக்கும் என்று ஊகித்துக் கொள்ளுங்கள்.

உடையும் கச்சிதமாக அணிந்து, தலைமயிரையும் அழுத்தப் பின்னி, நீளமாக முதுகில் தொங்கும் அழகைக் காணக் காண என் உள்ளத்தில் அவளிடம் அன்பு ஊற்றுப் பெருக்கெடுத்து ஓட ஆரம்பித்தது. இதையெல்லாம் படித்தால், அவள் படுகர்நாடகமாக இருப்பாள் என்று தோன்றுகிறதா? இல்லை...... இல்லை..... அவள் முகத்தில் லாவண்யமும், லக்ஷ்மியும் சேர்ந்து குடிகொண்டிருக்கும் களை தென்பட்டது. அவள் நைலானும், நைலக்ஸும் அணியத்தான் செய்தாள். ஆனாலும் அதிலும் அடக்கம், அமைதி குடிகொண்டிருந்தது. நெற்றியில் ஒளிர்ந்த பைசா அளவு குங்குமப் பொட்டு அவளுடைய அழகிய முகத்தை, சந்தன

வண்ண வதனத்தை மேலும் அழகாக்கியது.

இவ்வளவு அடக்கத்துடன் இருக்கும் பெண்ணிடம் அன்பு கொண்ட நான், எப்படிப் பேசிப் பழக முடியும்? நானாக வலியப் போய்ப் பேசினால் அவள் ! என்னைப் பற்றித் தவறாக நினைக்க மாட்டாளா? மேலும் மற்றவர்கள் ஏதாவது நினைத்து விட்டால்? நான் மிகவும் சங்கோசி. வேலை சம்பந்தமாகப் பேசும் சாக்கில் பேசிப் பழகலாம் என்றால், என் வேலைக்கும், அவளுடைய வேலைக்கும் சம்பந்தம் துளிக்கூடக் கிடையாது.






எல்லோருடனும் துணிவாகப் பேசிப் பழகும் ஸ்ரீதர்கூட அல்லவா அவளுடன் பேசத் துணியாமல் இருக்கிறான்! அவளுடைய அடக்கவொடுக்கமான நடவடிக்கையே, அவளை நெருங்க விடாமல் அவனையும் மற்றவரையும் தடுத்தது.

ஆகவே, என் மனம் அவளைப் பற்றி மானசீகமாக எண்ணுவதிலும், அவளை மௌனமாகப் பார்த்து ஆனந்தம் கொள்வதிலும் திருப்திப்பட்டுக் கொண்டிருந்தது. இதுவரை என் பெற்றோர் என் திருமணத்தைப் பற்றிப் பேச்செடுத்தபோதெல்லாம் தட்டிக் கழித்தவன், இப்போது திருமணத்தைப் பற்றி எண்ண ஆரம்பித்தேன். இந்தப் பெண்ணை மணக்க வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. எனக்கேற்றவள் இவளே என்று என் மனம் கூறிற்று.

எப்படி அவளை மணப்பது, எப்படி அவளிடம் என் எண்ணத்தை வெளியிடுவது என்று யோசித்தேன். அவள் அடக்க ஒடுக்கமாக இருப்பதால் அவளிடம் நேரே பேசுவது சரியல்ல என்று நினைத்தேன். கடிதம் எழுதித் தெரிவித்தால் அவள் என்னை ஒரு 'காலி' என்று நினைத்தாலும் நினைக்கலாம். அதனால் அவளைப் பெரியோர்கள் மூலமாகவே மணந்து கொள்வது என்று தீர்மானித்தேன். அதுவுமன்றி, கடைசிவரை அவளுக்கு வரப்போகும் மணவாளன் நான்தான் என்று தெரியக் கூடாது என்று நினைத்தேன். திடீரென்று பெண் பார்க்கப்போவதுபோல்பெற்றோருடன் சென்று அவளைத் திகைப்பிலாழ்த்த நினைத்தேன். என் திட்டத்தைப் பற்றிப் பிறகு கூறினால் அவள் என் சாமர்த்தியத்தைப் புகழ்வாள். அப்போது அவள் முகம் எப்படி மலரும் என்று கற்பனை செய்து பார்த்து மகிழ்ந்தேன்.

சரி...... அவளை மணக்கத் திட்டம் போட்டாயிற்று. அவளுடைய விலாசத்தை எப்படி அறிவது? ஒரு விஷயம் சொல்லவில்லையே ? இதற்குள் புரிந்து கொண்டிருப்பீர்கள். என்னடா, அவள், அவள் என்றே சொல்லிக் கொண்டிருக்கிறானே, அவள் பெயரைக் கூறவில்லையே என்று. எனக்கே அவள் பெயர் தெரியாது ! நான்தான் சங்கோசியாயிற்றே. யாரைக் கேட்டு அவள் பெயரைத் தெரிந்து கொள்வது? அவளைப் பற்றிக் குறிப்பாகக் கேட்டால், மற்றவர்கள் பரிகசித்தால் என்ன செய்வது என்று பயம்! அவளுடைய பெயரே தெரியாத போது அவளுடைய வீட்டு விலாசம் எப்படித் தெரியும்? எப்படித் தெரிந்து கொள்வது என்று தவித்த போதுதான் அந்தச் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது.

அன்று நான் அலுவலகம் வருவதற்கும், அவள் வருவதற்கும் சரியாக இருந்தது. எனக்கு முன்பாகச் சென்று 'அட்டெண்டன்ஸ்' ரிஜிஸ்தரில் கையொப்பமிட்டாள். அடுத்தபடியாகக் கையொப்பமிட நின்று கொண்டிருந்த நான் ஏரப்பார்வையாக அவள் கையொப்பமிட்டதற்கெதிராக இருந்த பெயரைக் கவனித்தேன்.

'ஊர்மிதி!'

ஆஹா.....! என் ஜன்மமே சாபல்ய மடைந்து விட்டதாக எண்ணி உள்ளப் பூரிப் படைந்தேன். அப்போதே அவளை அடைந்து விட்டதாக உள்ளம் குதி போட்டது. நான் கையொப்பமிடும்போது கைகூட இலேசாய் நடுங்கியது.

''அப்பாடி.....! அவளுடைய பெயர் தெரிந்து விட்டது! இனி அவள் விலாசம்....? அது அவளுடைய 'பர்ஸனல் பைலி'ல் இருக்கும். அவளுடைய வேலை மனுவில் இருக்குமல்லவா? ஆனால் அந்தப் பைலை எப்படிப் பார்ப்பது? நான் 'ரிக்கார்ட் கிளார்க்'கைக் கேட்டால் அவன் என்னைக் கேலி செய்வது மட்டுமின்றி, ஆபீஸ் முழுதும் தண்டோரா போட்டுவிடுவான். அப்பேர்ப்பட்ட ஆசாமி!

அவளுடைய வீட்டு விலாசத்தை அறிவது எப்படி என்று மண்டையைக் குழப்பிக் கொண்டே என் உள்ளம், ''ஜயந்தி, ஜயந்தி'' என்று மஹாமந்திர ஜபம் செய்து கொண்டிருந்தது.

தற்செயலாக அன்று கோபாலனுடைய மேஜையின் மேல் ஜயந்தியின் 'பர்ஸனல் பைலை'ப் பார்த்தேன். அவளுடைய மூன்று மாத வேலையைப் பற்றி ரிப்போர்ட்டு கேட்டு அவன் மேஜைக்கு வந்திருந்தது அவளுடைய பைல். கோபாலனிடம் நான் வேறு வேலையாகச் சென்றிருந்தேன். அப்போது அவன் தன் இருப்பிடத்தில் இல்லை. 'மானேஜர் கூப்பிட்டிருந்தார் என்று போயிருந்தான். 'வரட்டும்' என்று நான் அவனுடைய நாற்காலியில் உட்கார்ந்து ஏதோ சும்மா புரட்டுவது போல், யாரும் கவனிக்க வில்லையே என்று பார்த்துக் கொண்டு ஜயந்தியின் பைலைப் புரட்டினேன். அடியில் இருந்த மனுவிலுள்ள அவளுடைய விலாசத்தைப் பார்த்துக் கொண்டேன்.

லட்ச ரூபாய்க்குப் புதையல் கிடைத்தால் கூட அத்தனை ஆனந்தம் உண்டாகாது. மறக்காமல் உடனே ஒரு காகிதத்தில் அவசரம் அவசரமாக அவள் விலாசத்தைக் குறித்துக் கொண்டேன்.

இரண்டு நாட்கள் கழித்து என் தாயார், ''ஏண்டா, ராமா! எத்தனை நாட்கள்தான் நீ இப்படியே கல்யாணம் வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருக்கப் போகிறாய்?'' என்று வழக்கம் போல் ஆரம்பித்தாள்.

நான் வழக்கம் போல், ''என்னம்மா, என் பேரே கல்யாணராமன்தானே...... இன்னும் எனக்கு எதற்குக் கல்யாணம்?'' என்று ஹாஸ்யமாகப் பேசாமல், ''சரியம்மா... உன் இஷ்டப்படி செய்யம்மா'' என்று கூறி விட்டேன்.

என் தாயாருக்கு ஆனந்தம் தாங்கவில்லை. ''அப்பாடா, இப்பவாவது சரின்னு சொன்னயேடாப்பா... இனிமேல் நல்ல பெண்ணாகப் பார்த்து உனக்குக் கல்யாணத்தை நடத்த வேண்டியது என் பொறுப்பு'' என்றாள்.

''அம்மா! ஒரு விஷயம்....'' என்று மெள்ளத் தயக்கத்துடன் ஆரம்பித்து என் மனத்தில் உள்ளதையெல்லாம் அம்மாவிடம் விளக்கினேன்.

''அம்மா! நீயும், அப்பாவும் போய் அவளைப் பாருங்கள். உங்களுக்குப் பிடித்திருந்தால் நான் அவளைக் கல்யாணம் பண்ணிக்கொள்கிறேன். இல்லாவிட்டால் வேண்டாம். நான் ஒன்றும் கண்ணை மூடிக்கொண்டு 'காதல், கீதல்' என்று பைத்தியம் பிடித்து அலைகிறேனோ என்று பயப்பட வேண்டாம்'' என்று கூறியதும்தான் என் தாயார் சமாதானமடைந்தாள்.

விலாசத்தைக் கொடுத்தவாறே, ''அம்மா! நான் அவள் ஆபீஸில் வேலை செய்கிறேன் என்று கூற வேண்டாம்'' என்று எச்சரித்து வைத்தேன்.

எல்லாம் என் இட்டப்படியே நடைபெற்றன. என் தாயார், தகப்பனார் இருவரும் ஜயந்தியின் வீட்டுக்குப் போய்விட்டு வந்தார்கள். கடைசியில் ஜயந்தியின் தகப்பனார் என் தகப்பனாருடன் ஹைஸ்கூலில் ஒன்றாகப் படித்தவராம். அதனால் . ரொம்பத் திருப்தி உண்டாகி விட்டது என் பெற்றோருக்கும், ஜயந்தியின் பெற்றோருக்கும்.

பேச்சு வாக்கில் நான் எங்கே வேலை செய்கிறேன் என்று கேட்டதும், என் தகப்பனார் உண்மையைக் கூறிவிட்டார். ''அட, நம்ம ஜெயந்தியும் அங்கேதான் வேலை செய்கிறாள்''

# வாருங்கள்...
## வசந்தத்தை வரவேற்போம்

குளிர்மையானதும் கவலைக்கிட மற்றதுமான இந்த பாடா செருப்புகள் மென்மையாகவே உங்களை நெடுந்தூரம் இட்டுச் செல்லும். எல்லாக் காலங்களிலும் புதுக் கருக் கழியாமல் இருப்பதற்குக் காரணம், இவை மிருதுவானதும் வெகுகாலம் நீடித்துழைக்கக்கூடியதுமான தோல்களால் உருவாக்கப்பட்டிருக்கின்றன தவிர, உங்கள் அழகிற்கு அழகுடன் சௌகரியமும் தருவதெற்கென்றே தயாரிக்கப்பட்டிருப்பதை நன்கு உணர்வீர்கள். உங்கள் அருகிலிருக்கும் பாடா ஸ்டோரிலுள்ள எழில் மிகுந்த பலவகைச் செருப்புகளைப் பார்வையிட தவறாதீர்கள்.





தீபா 5.95

**Bata**



லலிதா 10.25



திலீப் 12.95



ப்ராண்டியர் 18.95

என்று கூறிவிட்டு, ஜயந்தியைக் கூப்பிட்டு, ''அம்மா ஜயந்தி, மாமா மாமிக்கு நமஸ்காரம் பண்ணும்மா. அவா பிள்ளையைத்தான் உனக்குப் பேசிக் கொண்டிருக்கிறோம்... அவர் கூட உன் கம்பெனியில்தான் வேலையாயிருக்கிறாராமே... கல்யாணராமன்னு பேர்... தெரியுமோ?'' என்று கேட்டார்.

'ஊம்...' என்று தலையசைத்தாளாம்.

''அடி கள்ளி! என் பெயரை எப்படித் தெரிந்து வைத்திருக்கிறாய்!... ஓஹோ... என்னைத்தான் அடிக்கடி ஹெட்கிளார்க் ''கல்யாணராமன்'' என்று அடித் தொண்டையில் கூப்பிடுகிறாரே...'' என்று நினைத்துக் கொண்டேன்.

ஜாதகம் பார்த்ததில் அதுவும் பொருத்தமாக அமைந்தது. கடைசியில் ஒருநாள் லக்னப் பத்திரிகை எழுத நிச்சயதார்த்தத்துக்கு நாள் குறிப்பிட்டிருந்தார்கள்.

அன்று நாங்கள் போனோம். எங்கள் உறவினர் சிலர், நண்பர்கள், அவர்கள் உறவினர், நண்பர்கள் என்று நாற்பது ஐம்பது பேர்கள் கூடிவிட்டோம். நடுவில் கூடத்தில் மணை போட்டு அதில் பெண்ணை — ஜயந்தியை — உட்கார அழைத்து வந்தார்கள்.

நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்த என்னை ''அடே, கல்யாணராமா, பாருடா உன் காதலி வந்துவிட்டாள்... அதிருஷ்டக் காரனடா, நீ...'' என்று என் நண்பன் கண்ணன் கிசுகிசுத்தான். தலையைத் திருப்பி அவளை அந்தக் கும்பலில் காணச் சங்கோசமாக இருந்தது. நண்பன் வெங்கடேஷ் பலவந்தமாக என் தலையைத் திருப்பி, ''ஆபீஸில் சாதாரண அலங்காரத்தோடு பார்த்திருக்கிறாய்... இப்போ பார்...'' என்று கூறினான்.

நான் மெதுவாகக் கண்களை உயர்த்திப் பார்த்தேன். ஒரு கணம் என் தலை சுற்றுவது போல் இருந்தது. கண்கள் என்னை ஏமாற்றுகின்றனவா? இவளா ஜயந்தி?... இவளா?... இல்லை... இல்லை...

இந்தப் பெண்ணும் என் அலுவலகத்தில் வேலை செய்பவள்தான். அழகாகத்தான் இருந்தாள். ஆனால் என் மனத்தைக் கவர்ந்த அந்தப் பெண்ணைவிடச் சற்றுக் குறைப்பு. அவ்வளவுதான். ஆனாலும்...

நான் இப்போது என்ன செய்வது? இவள் இல்லை, நான் விரும்பிய பெண் என்று கூறிவிடலாமா என நினைத்தேன். ஆனால், எவ்வளவு அவமானமாகிவிடும்? என்னை எல்லோரும் அப்புறம் பரிகசிக்க மாட்டார்களா? காதலிக்கும் பெண்ணின் பெயர்கூடச் சரியாகத் தெரிந்து கொள்ளாமல் இப்போது ஓர் அப்பாவிப் பெண்ணை அவமானப்படுத்தி விட்டாயே என்று ஏசமாட்டார்களா?

நான் ஒரு முட்டாள். என் மனத்தைக் கவர்ந்தவள் பெயர் ஜயந்தி என்று தவறாக எண்ணிவிட்டேனே? பெயரைப் பார்க்கும் போது மேல் கீழ் பெயரைத் தவறிக் குறித்துக்கொண்டேனே?

ஒன்றும் புரியவில்லை. ஒரு கணம் தலை நிமிர்ந்து எதிரில் மணையில் உட்கார்ந்திருக்கும் ஜயந்தியைப் பார்த்தேன். அதே சமயம் அவளும் பார்த்தாள். அவளுடைய கண்கள் பளபளத்தன. அவளுடைய உதட்டில் புன்னகை நெளிந்தது. அவள் பார்வை என் இதயத்தை ஊடுருவிப் பாய்ந்தது. ஒரு கணம் என் உடலில் சிலிர்ப்பு உண்டாயிற்று.

நான் ஓர் ஆட்சேபணையும் கூறச் சக்தியற்றுச் சிந்தனையிலிருந்த நேரத்திலேயே லக்னப் பத்திரிகை வாசித்துக் காட்டப்பட்டது. ஜயந்தி எழுந்து எல்லோருக்கும் நமஸ்காரம் செய்துவிட்டுப் போய்விட்டாள்.

அப்புறம் என்ன? அடுத்த நாள் ஆபீஸ் போன பிறகுதான் மெதுவாகக் கோபாலனைக் கேட்டதில் தெரிந்தது: இரண்டு பேர்களும் ஜெயந்திதானும்! ஒருத்தி கே. ஜயந்தி, இன்னொருத்தி வி. ஜயந்தி. நான் அவசரத்தில் இனிஷியலைக் கவனிக்காமல் கே. ஜயந்தியை மணக்க ஆசைப்பட்டு வி. ஜயந்தியின் 'பைலை'ப் பார்த்து அவளுடைய விலாசத்தை எடுத்துக் கொண்டு என் திருமணத்தை நிச்சயம் செய்து விட்டேன்.

அவ்வளவு தூரம் ஜயந்தியை மணக்கப் போகிறேன் என்று கூறிவிட்டு, அதுபோல் அவர்களும் நிச்சயம் செய்த பிறகு, இந்த ஜயந்தியும் என்னை மணக்கச் சம்மதம் தெரிவித்து ஆனந்தத்தில் இருக்கும்போது நான் 'இந்த ஜயந்தியல்ல என் மனத்துக்குகந்தவள்' என்று கூற முடியுமா? வேறு சமயமானால் கூறிவிடலாம். ஆனால் தினமும் நான் என் அலுவலகத்தில் இந்த ஜயந்தியைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமே. அவள் என் அசட்டுத்தனத்தை ஆபீஸில் பறை சாற்றிவிட்டால் அப்புறம் நான் எப்படி உத்தியோகம் செய்ய முடியும்? எல்லோரும் என்னைப் பரிகசித்துப் பரிகசித்து என் மானத்தை வாங்கி விடுவார்களே!

சாதக பாதகங்களையெல்லாம் யோசித்துப் பார்த்தபோது என் முட்டாள்தனத்தை வெளிக் காட்டிக் கொள்ளாமல், இவள்தான் என் மனத்துக்குகந்தவள் என்று எல்லோரும் எண்ணிக் கொள்ளட்டும் என்று மௌனமாக இருந்துவிட வேண்டியதாகி விட்டது.

'திருடனுக்குத் தேள் கொட்டினாற்போல்' என்பார்களே அப்படித்தானென்றாலும் இதில் கடுப்பே தெரியாது என்பதும் ஆனந்தச் சிலிர்ப்புத்தான் உண்டாகும் என்பதும் போகப் போக எனக்குத் தெரிந்தது!

---

**டாக்டர் ஸ்ரீஹரியின் சுற்றுப் பயணம்**

ஸ்ரீஹரி 13-3-66 இரவு சென்னையிலிருந்து புறப்பட்டு 15-3-66 பம்பாய் சேருகிறார். அங்கு லயான் மாதுங்கா [கிழக்கு] ரோட், 26-208, மீனு லதனில் [போன் 472011] தங்கி 16-3-66 இரவு புறப்பட்டு 18-3-66 சென்னை சேருவார்.

அத்தியாயம் அறுபத்துமூன்று

# நண்பனின் புதிய தொழில்

அடுத்த நாள் மாலை நான்கு மணியிருக்கும். அன்றைய ஜல்லி வியாபாரத்தை முடித்துக் கொண்டு அறைக்குத் திரும்பிய சபேசன் வழக்கம் போல் குளித்து வேறு உடை அணிந்து கொண்டு டிரங்க் பெட்டியின் மேல் உட்கார்ந்தான்.

நேற்று மாலை சந்தியாவின் வீட்டிலிருந்து வந்ததிலிருந்தே அவன் மனம் சரியாக இல்லை. இரவெல்லாம் ஏதேதோ எண்ணங்கள், குழப்பங்கள். 'என்ன இது, எங்கே போனாலும் என் நிம்மதி குலைகிறதே தவிர அமைதியும் சந்தோஷமும் கிடைக்க மாட்டேன் என்கிறதே' என்று நினைத்துத் தன் மீதே அவனுக்குச் சலிப்பும் ஏற்பட்டது. இப்படி அவன் சலிப்பும் குழப்பமும் அடையக் காரணம் என்ன? அந்த அகதி வாலிபனையும், மலையாளிப் பேர்வழியையும் அங்கே பார்த்ததாலா?

ஆமாம்; அவர்கள் அவனுக்கு ஒரு பெரும் புதிராகத் தோன்றினர். அவர்களிடம் சுரேஷ் சௌத்ரி நடந்து கொண்ட முறை இன்னும் அவன் வியப்பை அதிகரித்தது. கவுண்டன்பாளையம் அகதி முகாமில் இருக்கப் பிடிக்காமல் சுரேஷ் சௌத்ரி தம் மகளுடன் ஓடிவந்து விட்டதிலாவது ஓரளவு நியாயம் இருக்கலாம்; அவரோடு சேராமல் அங்கேயே இருந்த அந்தக் குள்ள வாலிபன் எப்போது, எப்படி, இங்கு வந்து சேர்ந்தான்? அவன் வரக் காரணம் என்ன? அதுவும் சுரேஷிடமே வந்திருக்கிறானே?.... சரி; இவர்கள்தாம் அகதிகள். ஒன்றாகச் சேர்ந்திருக்கிறார்கள். அது சகஜம். ஆனால் இவர்களைப் பின்தொடர்ந்து — இவர்களுக்கு எவ்வகையிலும் சம்பந்தமில்லாத — அந்த மலையாளியும் வந்திருப்பது ஏன்? எதனால் இவர்களுக்குள் இத்தனை இறுக்கமான அச்சு ஏற்பட்டிருக்கிறது?

சபேசனுக்கு ஒன்றுமே புரியவில்லை. இதை விடப் புரியாத இன்னொன்றும் இருந்தது. 'என்னை எதற்காகச் சுரேஷ் சௌத்ரி இன்று மாலை வந்து தம்மைப் பார்க்கச் சொன்னார்? அதுவும் அந்த வாலிபன் கட்டளையிட்ட பின்



அதை அவர் சொன்னதுபோல் தோன்றியதே! முக்கியமான விஷயமாம்; எனக்கு இலாபகரமாகவும் இருக்குமாம் — அவை என்னவாயிருக்கும்?'

அவனையறியாமலே அவனுள் ஒருவிதப் பயம் ஏற்பட்டது. "'இனி அந்தப் பக்கமே தலை காட்டக் கூடாது' என்றும் எண்ணினான். ஆனால், சந்தியா? சப்பாத்திக் கள்ளிகளிடையே மலர்ந்துவிட்ட மனோரஞ்சித மலராக அவனுக்கு அவள் தோன்றினாள். அந்த மலரின் மணம் அவனை மயக்கித் தன்னிடம் இழுத்தது: ஆயினும் கூரிய முட்கள் நிறைந்த சப்பாத்திக் கள்ளிகளை எப்படிக் கடந்து செல்வது என்ற தயக்கம்.

'வேண்டாமே! அந்தத் தொடர்பே எனக்கு வேண்டாம்.'

உடனே வெண்ணிற முல்லை மலரின் இதமான நறுமணம் அவனது நெஞ்சின் ஒரு மூலையில் படர்ந்து மணப்பது போன்ற பிரமை. கானல் பாரித்த பாலைவனத்தில் சரளைக் கற்களுக்கிடையே அந்த முல்லைக் கொடி வாடித் துவண்டு நிற்பது போன்ற ஒரு நுண்ணிய சோக மயமான உருவெளிக் காட்சி!.....

சபேசன் சட்டென்று எழுந்தான். 'வேதா! இதோ, உன்னை நான் பார்க்க வருகிறேன். உன் கோபத்தை யெல்லாம் நொடியில் போக்கி விடுகிறேன்.' — தன்னை மீறிய ஒரு தாகக் கறுகறுப்புடன் அறைக் கதவைச் சாத்திக்கொண்டு பாய்க்கடை பஸ் நிலையத்தை நோக்கி நடந்தான்.

தங்கசாலைத் தெற்கு முனையை அடைந்து மெமோரியல் ஹால் ரோட்டில் திரும்பிய அவன், வலதுபுற நடைபாதையில் ஏதோ ஜனக் கும்பல் கூடி நிற்பதைக் கண்டு மெல்லப் போய் எட்டிப் பார்த்தான். அங்கே ஒரு விசித்திரமான வியாபாரம் நடந்து கொண்டிருந்தது.

பெயரோ, பிரயோசன விவரமோ தெரியாத பலவகை காட்டு மரஞ்செடி கொடிகளின் வேர்கள், கிழங்குகள், உலர்ந்த காய் கனிகள், ஒருபுறம் பரப்பி வைக்கப்பட்டிருக்க; இன்னொரு பக்கம் பலவிதமான பறவைகள், பிராணிகள், ஜந்துக்களின் இறகுகளும், தோல்களும்






## இரட்டைக் கண்ணன்

என் தமக்கை மகன் ராஜு, வயது மூன்று. பிடிவாதம் செய்து அழுது கொண்டிருந்தான். என்ன சமாதானம் செய்தும் கேட்பதாக இல்லை. அவன் அழுகையை நிறுத்துவதற்காக, 'இப்போ அழுகையை நிறுத்தலேன்னா நான் ரெட்டைக் கண்ணனைக் கூப்பிடப் போறேன்' என்று பயமுறுத்தும் குரலில் கூறினாள் என் தமக்கை. குழந்தையும் சட்டென்று தன் அழுகையை நிறுத்தி விட்டான்.

சிறிது நேரம் அம்மாவையே உறுத்துப் பார்த்துக் கொண்டிருந்தவன், திடீரென்று, 'ரெட்டைக் கண்ணனைக் காண்பி' என்று அழத் தொடங்கி விட்டான். இந்த அழுகையைச் சரியான சமாதானம் செய்தும் நிறுத்த முடியாமல் போகவே, அவனுக்கு எப்போதும்போல் ஒரு



வாழைப்பழம் வாங்கிக் கொடுத்துத் தேற்ற வேண்டியதாயிற்று.

நாமொன்று நினைக்கக் குழந்தையொன்று நினைக்கிறது!

தஞ். ஸ்ரீநிவாஸன்,
பெங்களூர்-18

---

நீக்கப் பெருமல் அப்படியப்படியே 'பாடம்' செய்த நிலையில் பரப்பப்பட்டிருந்தன. இவைகளுக்கு நடுவில் வேடுவனைப்போல் தோற்றமளித்த ஒருவன் கம்பீரமாக உட்கார்ந்திருந்தான். அவன் எதிரே வட்ட வடிவமான தகரப் பேலா ஒன்று சற்றே நிமிர்த்திச் சாய்த்து வைக்கப்பட்டிருந்தது. அந்தப் பேலாவிலே கருஞ் சிவப்பு நிறமான ஒரு வகைத் திரவத்தில் இறந்த பறவைகள் சிலவற்றின் உடல்கள் ஊறிக்கொண்டு கிடந்தன. அவை பருந்தோ, காட்டுக் கோழியோ, காடையோ, கவுதாரியோ என்ன கர்மமோ தெரியவில்லை. அந்தத் திரவத்தைக் கரண்டியால் அள்ளிச் சிறு சிறு சீசாக்களில் ஊற்றி அடைத்து வரிசை வரிசையாக அடுக்கிக் கொண்டிருந்தான் அவன். அப்படிச் செய்து கொண்டே ஏதோ புரியாத பாஷையில் பேசிக் கொண்டுமிருந்தான். அந்தப் பேச்சில் சில நோய்களின் பெயர்களும், நரம்புத் தளர்ச்சிக் கோளாறு சம்பந்தமான விவரங்களும் வெளிப்பட்டன. அவற்றை அவனுடைய பயங்கரமான அபிநயங்களிலிருந்தே புரிந்துகொள்ள முடிந்தது. இறந்த பட்சிகளின் உடலில் ஊறிக் கசியும் அந்தத் திரவத்தை ஏதோ சக்தி வாய்ந்த ஔஷதமெனச் சொல்லி அவன் விற்பனை செய்கிறான் என்பதும் தெளிவாயிற்று. சீசா ஒன்றின் விலை நாலணா. கூட்டத்திலிருந்த சிலர் அதை வாங்கிச் சென்றனர்.

''பார்த்தியா, கெய்வா! இன்னா மாதிரி வியாபாரம் நடக்குது பார்த்தியா? அது இன்னான்னு உனக்குத் தெரியுமா?''

கூட்டத்தில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த சபேசன் தன் செவிகளுக்குப் பழக்கமான இந்தக் குரல் கேட்டு அவசரமாகத் திரும்பிச் சுற்றுமுற்றும் நோக்கினான்.

''தலையைத் திருப்பாதே, கெய்வா! அப்புறம் மூஞ்சியிலே அறுப்பு விழுந்துடிச்சின்னு என்னைக் கேட்கக் கூடாது!''— சந்தேகமில்லை; இது நச்சியின் குரல்தான். ஆனால், எங்கே இருக்கிறான் அவன்?

கூட்டத்தை விட்டு விலகிச் சற்றுப் பின்னால் வந்த சபேசன் அங்குமிங்குமாகத் தன் பார்வையை ஓட்டினான். அடுத்த கணம் அவனுக்கு ஒரே வியப்பு, பிரமிப்பு!

ஆமாம்; அந்தப் 'பட்சி ரஸ ஔஷத' விற்பனையாளனுக்குப் பக்கத்தில் காலியான தார் பீப்பாய்கள் பல அடுக்கப்பட்டுக் கிடக்க, அவற்றின் ஓரத்தே நடைபாதையில் ரிக்ஷாக்காரர்கள், கைவண்டிக்காரர்கள், கூலிக்காரர்கள் ஆகிய ஐந்தாறு பேர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருவனுக்கு வெகு மும்முரமாக 'ஷேவிங்' செய்துகொண்டிருந்தான் நச்சி. பேல் தகடுத் துண்டு ஒன்றை நன்றாகத் தீட்டி க்ஷவரக் கத்தியாக அவன் பிரயோகப்படுத்தும் அழகும், அவ்வப்போது அதைத் தன் உள்ளங்கையில் 'பட், பட்' என்று அடித்துக் கூரேற்றும் லாகவமும் — அடடா, காணக் கண் கோடி வேண்டும் போல் இருந்தது! ஒரு சிறிய மூளிக் கண்ணாடியும், தகரக் குவளையொன்றில் தண்ணீரையும் தவிர வேறு எந்த உபகரணங்களும் அவனிடம் இல்லை. அதாவது, அங்கே முக க்ஷவர வேலை மட்டும்தான் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

''மொள்ள நைனா! மொள்ள நைனா!'' என்று முகத்தை வலித்து அலறினான் கூலிக்காரக் கிழவன்.

''கேளு கெய்வா, அது இன்னா வியாபாரம்னு சொல்றேன்!'' என்று கிழவனின் கவனத்தைத் திருப்பிய நச்சி, பேல் தகடுக் கத்தியைத் தீட்டி வேலையை ஆரம்பித்துக் கொண்டு பேச்சைத் தொடர்ந்தான்: ''ஆமா; உனக்குக் கண்ணாலம் ஆயிடுச்சா?''

''ஐஞ்சாறு பேரப்புள்ளேங்க இருக்குது, நைனா!'' என்று சிரித்தான் கிழவன்.

''சிரிக்காம சொல்லய்யா! நீ சிரிச்சா உன் மூஞ்சி கர்ணக் கெழங்கு மாதிரி ஆவுது; அதிலே கத்தி போட்டு எப்படி வேலை செய்யறது? அப்புறம் எங்களுக்கும் அறுப்பு விழுந்தா என்னைக் கேட்கக் கூடாது!'' என்று எச்சரித்த நச்சி, ''அது இன்னய்யா, அஞ்சாறு பேரப் புள்ளேங்க? அதுக்கு ஒரு கணக்கு வழக்குக் கிடையாதா?'' என்றான் நகைத்துக் கொண்டே. ''அது சரி; உனக்கு எத்தினி பொஞ்சாதிகள்?''

''ரெண்டரை.....''

''இன்னாது, அரை கணக்கு?''

''கண்ணாலம் கட்டினது ரெண்டு; வைப்பு ஒண்ணு.''

''போட்ரா, சக்கைன்னானாம்!''

வண்டிக்காரர்களிடையே ஒரே சிரிப்பு, கும்மாளம்!

''பார்த்தியா, கெய்வா? அதான் சொன்னேன்: உன்னே மாதிரி ஆளுங்களுக்குத்தான் அந்தக் குறவன் டானிக் விக்கிறான்!'' என்று சிரித்தான் நச்சி.

''டானிக்குன்னா இன்னா நைனா?''

''தாதுபுஷ்டி ரஸம்! வோணுமின்னா ஒரு புட்டி வாங்கிக் குடிச்சுப் பாரு; மக்கா நாளே அரையா இருக்கிறதோடுகூட இன்னோர் அரையையும் புடிச்சுச் சேர்த்துக்குவே!''

நச்சிக்கும் அவனது 'கஸ்டமர்'களுக்கும் சிரிப்பை அடக்க முடியாமல் போய்விட்டது.

''மெய்தானா, நைனா?'' என்று வெகு அக்கறையாக விசாரித்தான் கூலிக் கிழவன்.

''பின்னே இன்னா, பொய்யா சொல்றேன்? அதோ பாரு, எத்தினி ஆளுங்க சுத்து முத்தும் பார்த்துப்பிட்டு அந்தப் புட்டியை வாங்கி ஜோபியிலே போட்டுக்கிட்டுப் போறாங்க! இங்கிலீஷ் படிச்சு, ஆபீஸிலே வேலை செய்யறவங்ககூட அதை வாங்கிக்கிட்டுப் போறதைப் பாரு!''

''அது இன்னாத்துலே செய்யறது, நைனா?''

''அங்கே 'ஷோ' பண்ணி வைச்சிருக்கிறானே பலவிதமான பட்சிங்க, பல ரகமான மூலிகை வேருங்க; அதையெல்லாம் ஒண்ணாப் போட்டு அரைச்சுக் கொளைச்சுப் பிசைஞ்சு வடிகட்டி இறக்கின எசென்ஸாம் அது! 'அர்ஜுன ரசாயனம்'ம்னு அதுக்குப் பேராம்! குறவன் சொல்றானே, தெரியலே?''

''இதெல்லாம் இங்கே யாருக்கு வேணும்?''

''ஆங், படா இல்லாடி கெய்வனாச்சே நீ!'' என்று சிரித்த நச்சி, மற்ற வண்டிக்காரர்களைப் பார்த்துச் சொன்னான்: ''கேட்டீங்களாய்யா, கெய்வன் சொல்றதை? இந்தக் கெய்வனுக்கு இருக்கிற புத்திகூட அந்தப் படிச்ச தொரைங்களுக்கு இல்லே. இன்னா பண்றது? எந்த மனுஷன்கிட்டேயும் மூணு விதமான டவுட்டுகள் எப்போதும் இருந்துக்கிட்டே இருக்குமாம்: தன் புத்தி மேல் சந்தேகப்படறது ஒண்ணு, தன்னோட பொஞ்சாதி மேலே 'டவுட்' படறது இன்னொண்ணு, தன் ஆம்பிளைத்தனத்திலே சந்தேகப்படறது மற்றொண்ணு. இதுகளை மூலதனமா வைச்சு நாலா வழிகளிலேயும் பணம் பண்றாங்க சிலர். புத்தியிலே சந்தேகமுள்ளவனை மேடையில் பேசற அரசியல்வாதி ஏமாத்திப் பணம் பண்றான்; பொஞ்சாதி மேல் சந்தேகப்படறவனை மந்திரக்காரனும், ஜோசியக்காரனும், சினிமாக்காரனும் ஏமாத்திப் பணம் பண்ணறான்; ஆம்பிளைத்தனத்திலே டவுட்டா இருக்கிறவனை இந்த மாதிரி குறவனும், குல்மால் மருந்துக் கம்பெனிக்காரனும் ஏமாத்திக் காசு புடுங்கறான். இப்படி யாப்பட்ட அநியாயங்களை எங்கே சொல்லி அழுவறது? மருந்துகள் செய்யறதுக்கும், அதுகளை விக்கிறதுக்கும் கெவர்மெண்டிலே எத்தினியோ சட்டங்கள், கட்டுப்பாடுகள் போட்டு வைச்சிருக்காங்களாம். ஆனால் இது மாதிரி பிளாட்பாரங்களிலே நரியையும், முசலையும், குருவியையும், கோட்டானையும் கட்டுக் கொண்டாந்து பரப்பி வைச்சுக்கிட்டு, இன்னான்னமோ 'கண்ட கஸ்மாலங்களையெல்லாம் கலக்கி, லேகியம் கஷாயம்னு வித்து ஜனங்கள் உடம்பைக் கெடுக்கிறதைப் பத்தி யாருமே எதுவும் கண்டுக்க மாட்டேங்கிறாங்க! அதோ, காடுகளிலேயே சுத்தி அலையற சித்த வைத்தியன்போல உட்கார்ந்துக்கிட்டு இருக்கிறானே, அவன் யார் தெரியுமா? நம்ப பட்டணத்திலே கேம்ப் அடிச்சிருக்கிற நரிக் குறவன்தான். ரெண்டு மாசத்துக்கு முன்னாடி அவனை சால்ட் கோட்டார்ஸ் மைதானத்திலே பார்த்தேன். ஊசி, மணி வியாபாரம் இப்ப ரொம்ப டல்லாப் போச்சு. அதான் எல்லாம் பிளாஸ்டிக்கிலே ஜிலு ஜிலுன்னு வந்துடிச்சே! பார்த்தான் கொறவன்; புழைக்கிறதுக்கு இப்படி ஒரு வழி கண்டு பிடிச்சுட்டான். படிச்ச மனுஷாளுங்க எப்படியெப்படியோ ஊரை ஏமாத்தலியா? இவனுக்குத் தெரிஞ்ச வழி இது: கெட்டிக்காரன். நான்கூட இந்த 'அர்ஜுன டானிக்' வியாபாரத்தைச் செய்யலாமான்னு யோசனை பண்ணிக்கிட்டு இருக்கேன்!... கெய்வா, எழுந்திரு, எழுந்திரு! எங்கே பதிமூணு பைசா, எடு! யோவ், நீ வாயா! வந்து உட்காரு, நேரமாவுது!''

இப்படிக் கூறி விட்டு நச்சி பட்பட்டென்று கத்தியைத் தீட்டலானான். (தொடரும்)

---

## ரஷ்யன் ராக்கெட்!




ராஜுவுக்கு நான்கு வயது. ஒரு நாள் இரவு கதை கேட்டான். 'இன்று கதை சொல்ல முடியாது, நாளை ஈஸ்டர் ஸண்டே சர்ச்சுக்குப் போக வேண்டும். சீக்கிரம் தூங்கு' என்றேன். 'ஈஸ்டர் என்றால் என்ன? சொன்னால்தான் தூங்குவேன்' என்று அவன் பிடிவாதம் செய்தான்.

'நம் கடவுள் ஏசுநாதரைச் சிலர் அநியாயமாய்ச் சிலுவையில் அறைந்து கொன்று விட்டார்கள். அவரைக் கல்லறையில் புதைத்த மூன்றாம் நாள் உயிரோடெழுந்து மேலே போனார். அந்த மூன்றாம் நாள்தான் ஈஸ்டர் ஸண்டே' என்றேன்.



'மேலே என்றால் சந்திரன் கிட்டேயெல்லாம் போயிருப்பார் இல்லையா?' என்றான். 'ஆமாம்' என்றேன். சிறிது நேரம் கழித்து, 'அம்மா! ஏசுநாதர் ரஷ்யன் ராக்கெட்டிலேதானே போயிருப்பார்?' என்றான்.

ஸ்ரீமதி சத்யா ஜோஸப், புதுடில்லி-5

---

# சக்தி வாய்ந்த இந்த பிரஞ்சு ஔஷதம் திரும்பவும் உங்களுக்குக் கிடைக்கிறது.

ரத்தத்தைச் சுத்தப்படுத்துகிறது. தொல்லைதரும் நோய்களிலிருந்து நிவாரணம் அளிக்கிறது.

காலில் ஏற்படும் ரணங்கள், மற்றும் சொறி சிரங்கு, படை, முகப்பருக்கள், கட்டிகள், கொப்புளங்கள், சீழ்ப் புண்கள் போன்ற அநேக சரும வியாதிகளுக்கு மூலகாரணம் அசுத்தமான ரத்தம்தான்.

இந்த விதமான நோய்கள் பலவற்றிற்கு மேல்பூச்சாகக் களிம்பையோ மருந்தையோ தடவுவதால் பிரயோசனம் இல்லை. சில நாட்களில் வியாதி திரும்பவும் வந்து விடுகிறது. சிலர் ஒவ்வொரு வருஷமும் சொறி சிரங்கு, கட்டிகள், முகப்பருக்கள், கால் ரணங்கள், சீழ்ப் புண்கள் போன்ற நோய்களால் வருந்துகிறார்கள். இந்த வியாதிகளின் அடிப்படைக் காரணம் ரத்தத்தில் இருக்கிறது.

ரிச்லேஸ் பிளட் பியூரி:ஃபையர் (RICHELET'S BLOOD PURIFIER) சாப்பிட்டுப் பாருங்கள். ஆச்சரியகரமான அதன் சக்தியைக் கண்டு நீங்கள் அதிசயப்படுவீர்கள். சருமத்தின் ஆழமான பகுதிகளையும் அது சுத்தப்படுத்துகிறது. ரத்தம் சுத்தமாகிறது. விருத்தியாகிறது. மேல் புண்களும், படைகளும் மறைந்து சருமம் தனது இயற்கையான, ஆரோக்கியமான பளபளப்பைப் பெறுகிறது.

ரிச்லேஸ் லாக்ஸட்டிவையும் (RICHELET'S LAXATIVE) கல்லாஸ் ஆயிண்ட்மெண்டையும் (GALLA'S OINTMENT) உபயோகியுங்கள்.

# ரிச்லேஸ்
## பிளட் பியூரி:ஃபையர்

எல்லா மருந்துக் கடைகளிலும், ஸ்டோர்களிலும் கிடைக்கும்.
விவரங்கள் அறிவிக்கும் இலவச அறிவிப்புக்கு (FOLDER) எழுதுங்கள்.

இந்தியா வெங்கும் ஏஜண்டுகள் தேவை. விண்ணப்பிக்கவும்:

இந்தியாவில் ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:
மஹாராஸ்வரி ஜெனரல் ஸ்டோர்ஸ்,
19/35, பெரிய கடை வீதி, கோயமுத்தூர்

EP/MG-1

# யாரிடம் கேட்பது?

ஜி. கே. பொன்னம்மாள்

ஜோஸப் நெற்றியில் வழிந்த வியர்வையைத் துண்டால் துடைத்துக் கொண்டே பக்கத்திலிருந்த மண் கூஜாவிலிருந்து ஒரு கிளாஸ் குளிர்ந்த தண்ணீரை எடுத்துக் குடித்தான். ஒரு மணி நேரமாக அடுப்படியில் நின்று வேலை செய்ததின் பலனாக அவன் மிகவும் களைத்திருந்தான். அவன் உதவி ஆள் மைக்கேல் மைதா மாவு பிசைந்த கையை உதறிக் கொண்டே, ''கேக்கு மிக நன்றாக அமைந்து விட்டது, ஜோஸப்! அதுவும் சர்க்கரைப் பாகினால் கேக்கின் மேல் பல வர்ணங்களில் பட்டாம் பூச்சிபோல் அமைத்திருக்கிறீர்களே — அது மிக மிக அழகாக இருக்கிறது. கண்டிப்பாக இந்தக் கிறிஸ்துமஸுக்கு நாம் செய்த கேக்குகளில் இதுதான் மிகவும் சிறந்தது. ஒரு வேளை இதைப் பார்த்துச் சந்தோஷப்பட்டு, எஸ்டேட் முதலாளி, அருள் நாயகம் ஓர் ஐந்து ரூபாய் அதிகமாகக் கொடுத்தாலும் கொடுப்பார்'' என்றான் மகிழ்ச்சியுடன். கேக்கின் அமைப்பில் அப்படியொரு நம்பிக்கை.



இருந்தது. ஜோஸப் இதற்கு நேர் எதிரிடை. பன்ரொட்டி என்று சாதாரண வகைகளை ஒரு கையாளை வைத்துக் கொண்டு தானே செய்து விற்று வந்தான். இத்தனைக்கும் பலவிதமான உருவங்களில் கேக்கு செய்வதில் ஜோஸப் மிகவும் கெட்டிக்காரன். ஆனால் அதற்கான பணத்தைச் செலவிட இயலாததனாலே அவன் அவைகளைச் செய்யவில்லை. அவன் கடைக்குச் சாதாரண ரொட்டி, பன் என்று வாங்க வருவார்களே தவிர விலை உயர்ந்த சரக்கு வாங்க ஜனங்கள் ஜோணி கடைக்குத்தான் போவார்கள். ஜோணிக்குக் கேக்கு செய்யும் பக்குவமோ, விதமோ தெரியவே தெரியாது. இருந்தும் அதிருஷ்டமும், பணமும் அவன் பக்கம் இருந்து அவனை வியாபாரத்தில் முன்னுக்குக் கொண்டு வந்துவிட்டன.



மைக்கேலின் உதவியுடன் கேக்கை மெதுவாக எடுத்துக் கண்ணாடி அலமாரியில் வைத்தான் ஜோஸப். அவன் மனம் நிறைந்திருந்தது. கணிசமாக ஐம்பது ரூபாய் கைக்கு வந்து விடும். நேர் லாபம் இருபத்தைந்து ரூபாய். இதில் ஓர் ஐந்து ரூபாய் கிறிஸ்துமஸ் பரிசாக மைக்கேலுக்குக் கொடுக்க வேண்டும். வருஷம் முழுதும் அடுப்படியிலும், மாவு பிசைவதிலுமாகத் தனக்காக உழைக்கும் அந்தத் தொழிலாளிக்கு ஒரு நல்ல

மேஜையின்மேல் வைத்திருந்த அந்த அழகான கேக்கைச் சற்று நகர்ந்து நின்று பார்த்தான் ஜோஸப். உண்மையாகவே அது மிக நன்றாக அமைந்திருந்தது. இந்தக் கேக்கு செய்ய அவன் கையை விட்டு இருபத்தி ஐந்து ரூபாய் செலவு செய்ய வேண்டியிருந்தது. சர்க்கரை, முந்திரிப் பருப்பு, திராட்சை என்று ஏகப்பட்ட பொருள்கள் வேண்டியிருந்தன. எஸ்டேட்டு முதலாளியிடம் சென்று கெஞ்சிக் கூத்தாடி இப்படி ஓர் ஆர்டரை ஐம்பது ரூபாய்க்குப் பிடித்துக் கொண்டு வந்திருந்தான்.

பக்கத்துத் தெருவில் 'பேக்கரி' வைத்திருந்த ஜோனி கெட்டிக்காரன். எப்படியோ அவனுக்கு ஏகப்பட்ட ஆர்டர் 'கிடைத்திருந்தது. கடையில் மின்சார விசிறி, ரேடியோ — படிக்கப் பத்திரிகைகள் கண்ணைப் பறிக்கும் அழகிய கண்ணாடி அலமாரிகள் இப்படி வெகு ஆடம்பரமாக வியாபாரம் நடத்திக் கொண்டிருந்தான். மைதா மாவும் சர்க்கரையும் அவன் கடைக்கு மூட்டை மூட்டையாக வந்து இறங்கும். அவன் கீழ் பன்னிரண்டு பேர்கள் வேலை செய்துகொண்டிருந்தார்கள். ஜோனி முதலாளியாகக் காரில் சுற்றிக் கொண்டிருப்பான். பெரிய பணக்கார வீட்டுப் பிள்ளைகளெல்லாம் அவன் சிநேகிதர்கள். ஊருக்கு நடுவே ஒரு நல்ல வீடும் அவனுக்கு இருந்தது. ஒரு 'பேக்கரி' சொந்தக்காரனுக்கு இத்தனை ஆடம்பரமாக எப்படி வாழ முடிகிறது என்ற ஒரு கேள்வி ஜனங்களிடையே எழுந்து கொண்டு தான் இருந்தது. அவன் ரொட்டி வியாபாரத்துக்குப் பின்னால் சட்ட விரோதமாக மது வகைகளைக்கூட ரகசியமாகக் கடத்தி வந்து விற்கிறான் என்ற ஒரு வதந்தி உலாவினாலும், அது மெய்யோ பொய்யோ என்று இருந்து விட்டார்கள் ஊர்க்காரர்கள். விலை உயர்ந்த கேக்கு வேண்டுமானால் ஜோனி கடையில்தான் கிடைக்கும். அவனுக்கு முன் பணம் போட்டுத் தொழில் செய்ய வசதி



நான் கிறிஸ்துமஸுக்கு ஓர் ஐந்து ரூபாய் கொடுப்பதில் நியாயம் இருப்பதாகத்தான் தோன்றியது ஜோஸப்புக்கு. மீதி இருபது ரூபாயை வைத்துக் கொண்டு எப்படியாவது பண்டிகையைக் கொண்டாட வேண்டும். குழந்தை ரோஸிக்கு ஒரு ஸில்க் கவுன் வாங்க வேண்டும். மனைவிக்குப் புடவை வாங்க வேண்டியதுதான். ஆனால் அதற்குப் பணம் போதாது. ஒரு ஸில்க்கு ரவிக்கையாவது வாங்கலாம். பிறகு, பலூன், பொம்மை என்று குழந்தைக்குப் பரிசுப் பொருள்கள்; தனக்கு ஒரு பனியன். எதற்கும் இன்று மாலையே கேக்கைப் பத்திரமாக முதலாளி வீட்டில் கொடுத்துவிட வேண்டும். இப்படியெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தபோதுதான் அவனுக்கு முதலாளி வீட்டுக்குப் போட்டுக் கொண்டு போக நல்ல சட்டைகூட இல்லை என்பது நினைவுக்கு வந்தது. சிந்தனையில் மூழ்கியிருந்த ஜோஸப்பை அவன் மனைவியின் குரல் தட்டி எழுப்பியது.

''என்னங்க? மணி ரெண்டாயிடுச்சு. சாப்பிடக் கூட வரக் காணுமே என்று சோற்றை இங்கேயே கொண்டு வந்துவிட்டேன். என்னதான் வேலையாக இருந்தாலும் இப்படிப் பட்டினி கிடக்கணுமா?'' என்றபடி சாப்பாட்டுத் தூக்கைக் கீழே வைத்தாள் மரியம். நிமிர்ந்து பார்த்த ஜோஸப் சிரித்துக் கொண்டே, ''இது வரையில் நானும் மைக்கேலும் இந்தக் கேக்கு சரியாக அமைய வேண்டுமே என்ற கவலையிலே இருந்து விட்டோம். இப்பொழுதுதான் வேலை முடிந்தது. இந்தக் கிறிஸ்துமஸுக்கு எனக்குக் கிடைத்த நல்ல ஆர்டர் இது ஒன்றே ஒன்றுதான். அதுவும் எத்தனை சிரமப்பட்டு முதலாளி வீட்டுக்கு நடையாக நடந்து இந்த ஆர்டரைப் பிடித்தேன், தெரியுமா? கிறிஸ்துமஸுக்கு என்றாலே எல்லாரும் ஜோனி கடைக்குப் போய் விடுகிறார்கள். போகட்டும். அதைப் பற்றிக் கவலைப்பட்டுப் பயன் இல்லை. நீ வீட்டுக்குப் போகும்போது இந்தச் சட்டையை எடுத்துப் போய் நன்றாகத் தோய்த்து வெய்யிலில் காய வை. மாலை ஐந்து மணிக்கு மேல் நான் கேக்கை எடுத்துக் கொண்டு முதலாளி வீட்டுக்குப் போகணும். மைக்கேல், நீயும் இங்கேயே சாப்பிட்டுவிடு. இன்னும் சாதாரண கேக்கு வேறு கொஞ்சம் செய்ய வேண்டும். ரோஸிக்காகச் செய்யும் கேக்கில் ஒரு சின்ன ரோஜாப்பூ போட்டு விடுகிறேன்'' என்று வெகு குஷியாகப் பேசிக் கொண்டே போனான் ஜோஸப்.

இரண்டு பீங்கான் கிண்ணங்களில் கொண்டு வந்திருந்த குழம்புச் சோற்றை எடுத்து வைத்தான் மரியம். தொட்டுக் கொள்ள மீன்கறியும், வாத்து முட்டையும் இருந்தன. கையைக் கழுவி விட்டு இருவரும் சாப்பிட உட்கார்ந்தார்கள். இருவருக்கும் நல்ல பசி. அதுவும் திருப்தியாக ஒரு வேலை முடிந்து விட்டதில் ஒரு மகிழ்ச்சியும்கூட.....

மைக்கேல் இரண்டு கவளம் சோற்றை விழுங்கிவிட்டு, ''என்ன இருந்தாலும் மீன் குழம்பு செய்வதில் அண்ணியை யாரும் மிஞ்சிவிட முடியாது. என்ன ஜெசி?'' என்று தொட்டை விட்டான். ''மைக்கேல்! உனக்கு ஒரு விஷயம் தெரியுமா? நான் உன் அண்ணியைப் பெண் பார்க்கப் போன போது இவள் செய்த மீன் கறியில்தான் மயங்கி விட்டேன்'' என்றான் ஜோஸப் குஷியாக; கடைக்கண்ணால் மரியத்தைப் பார்த்துக் கொண்டே. மைக்கேல் — கலகல வென்று சிரித்தான்.

மரியம் வெட்கத்தினால் தலையைக் குனிந்து கொண்டே பொய்க் கோபத்துடன், ''போதுமே, உங்கள் கிண்டல் பேச்சு. சீக்கிரம் இரண்டு பேரும் சாப்பிட்டு முடியுங்கள். எனக்கு எத்தனையோ வேலை கிடக்கிறது'' என்று சாப்பாட்டுத் தூக்கை மூடி வைத்தாள்.

''அம்மா! இன்னிக்கு நம்ம கடையிலே பெரிய கேக்கு செஞ்சு வச்சிருக்காமே? அது ரொம்பப் பெரிசாக இருக்காமே?... எங்கே அம்மா, அதைக் காட்டேன்? பக்கத்து வீட்டு வயலட் பார்த்ததாகச் சொன்னாள். அவள் பள்ளிக்கூடத்துக்கு வரும்போது பார்த்தாளாம். அதைக் கேட்டதும் நான் பள்ளிக் கூடத்திலிருந்து ஒரே ஓட்டமாக ஓடி வந்து விட்டேன்'' என்றாள் ரோஸி உற்சாகமாக.

வெய்யிலில் ஓடி வந்ததனால் அவள் சிவந்த முகம் மேலும் சிவந்து விட்டது. நெற்றியில் வியர்வை முத்துக்கள் பளபளத்தன. அவள் கண்களில் ஆவலும், ஆசையும் நிறைந்திருந்தன. ''இதோ, நான் காட்டுகிறேன் பார். கையால் தொடக் கூடாது'' என்று மைக்கேல் அவளைத் தூக்கி அலமாரியில் வைத்திருந்த கேக்கை காட்டினான். ஒருகணம் குழந்தை அந்தப் பணியாரத்தின் அழகில் மயங்கி, கண்கள் அதிசயத்தில் விரிய மௌனமாகப் பார்த்துக் கொண்டேயிருந்தாள். வியப்பில் அவள் பேசும் சக்தியையே இழந்துவிட்டிருந்தாள். பிறகு தனது அழகிய கைகளைத் தட்டிக் கொண்டே, ''மைக்கேல் மாமா! எத்தனை அழகாக இருக்கு! ஹையா! அந்தப் பச்சை, சிவப்பு, ஊதா, மஞ்சள் நிறப் பட்டாம் பூச்சி கேக்கிலிருந்து பறந்துவிடும்போல் இருக்கு. இது எனக்குத்தானே அப்பா?'' என்றாள் ஜோஸப்பிடம். ''உனக்கு வேறு நல்லதாக ரோஜாப்பூ போட்டு செய்து தருகிறேன். இது வேண்டாம்'' என்றான் ஜோஸப் சாந்தமாக.

மரியம் சாப்பாட்டுப் பாத்திரங்களை எடுத்துக்கொண்டு வீட்டுக்குப் போகக் கிளம்பினாள். கேக்கு வைத்திருந்த அலமாரியையே சுற்றிச் சுற்றி வரும் குழந்தை ரோஸியைப் பார்த்து, ''ரோஸி! உனக்கு நல்ல கேக்கு அப்பா செய்து தருவாங்க. நீ இப்ப பள்ளிக் கூடம் போ'' என்றாள் மரியம்.

''எனக்கு வேறு எதுவும் வேண்டாம் அம்மா — இந்தப் பட்டாம்பூச்சி கேக்குத் தான் அழகாயிருக்கு. இதுதான் வேணும்'' என்றாள் ரோஸி பிடிவாதத்துடன். பிறகு மெதுவாக அலமாரியை எட்டி அந்தப் பட்டாம் பூச்சியைச் சிறு விரல் நுனியால் தொட்டுப் பார்த்தாள். மறுகணம், ''தொடாதே. விண்டுவிடும். பிறகு விலை போகாது'' என்று அதட்டிய தகப்பனின் குரலைக் கேட்டுக் குழந்தை நடுங்கிக் கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டாள். அந்த அதிர்ச்சியில் சர்க்கரைப் பாகினால் செய்த பட்டாம்பூச்சியின் ஓர் இறகு கையுடன் வந்துவிட்டது. மரியம் பதறிப்போய்விட்டாள். ரோஸியும் கையுடன் வந்த இறகைக் கீழே போடுவதா, வாயில் போட்டுக் கொள்வதா என்று தெரியாமல் விழித்துக் கொண்டே, ஆசையை அடக்க முடியாமல் வாயில் போட்டுக் கொண்டு விட்டாள். இனிய சர்க்கரை கரைந்து, அவள் வாயெல்லாம் இனித்தது.

ஒரே எட்டில் அலமாரியை நெருங்கிய ஜோஸப், முகத்தில் சினம் பொங்க, ''துக்கிரிச் சனியனே, கெடுத்து விட்டாயே வியா

## +□+□+□+□+ ''நான் ஒன்றும் அழமாட்டேன்!'' +□+□+□+□+

அம்மா அன்று டிபனுக்கு மசால் வடை செய்திருந்தாள். சுந்தருக்கு அது மிகவும் பிடிக்கும். தங்கை சுதா சமையலறையிலிருந்து தன் வடையை எடுத்துக்கொண்டு முற்றத்துக்கு ஓடி வந்தாள். அதைப் பார்த்த சுந்தர் தானும் சமையலறைக்கு ஓடி வந்து ஒரு வடையை எடுத்துக் கொண்டு தாழ்வாரத்துக்கு வந்தான். அதற்குள் சுதா அவன் சைக்கிளில் ஏறிச் சவாரி செய்து கொண்டிருந்தாள். அவன் சைக்கிளைப் பிறர் தொடுவதாவது? அவ்வளவு தான். வடையை முற்றத்துப்படியில் வைத்து விட்டு சைக்கிளைக் கைப்பற்ற ஓடினான். அச்சமயத்தில் அங்கு வந்த




எங்கள் அம்மா, ''என்டா சுந்தர்! வடையை இப்படிப் போட்டு விட்டுப் போனால் காக்கா வந்து கொத்திக் கொண்டு போய் விடாதா? அப்புறம் அழுது என்ன பயன்?'' என்றாள்.

அதற்குள் சுதாவைத் துரத்தி விட்டு சைக்கிளில் ஏறிக் கொண்ட சுந்தர் சைக்கிளை விட்டுக்கொண்டே வந்து வடையை எடுத்துக்கொண்டு கூறினான்.

''வடையைக் கொத்திண்டு போனா நான் ஒன்றும் அழமாட்டேன். காக்கா, காக்கா! நீ ரொம்ப அழகாயிருக்காயே, ஒரு பாட்டுப் பாடேன்னு சொல்வேன். காக்கா 'காகா'ன்னு கத்தும். வடை கீழே விழுந்துடும். நான் அதை எடுத்துண்டு ஓடி வந்துடுவேன்!''



- கே. மைதிலி, திருவிடைமருதூர்.




128 பக்கங்கள்—முழுதும்
வெள்ளைத்தாளில்

## ஸ்ரீ அஹோபில மடத்தின் தமிழ் மாதப் பத்திரிகை

# ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா

**25 ஆண்டுகள் நிறைந்து, அதன் வெள்ளி விழா வருஷத்தில், தோற்றத்திலும் அமைப்பிலும் மாற்றப்பட்டு புதிய உருவில் வெளி வருகிறது.**

**புதிய வெளியீடு: பராபவ, சித்திரை—ஏப்ரல் 1966**

**கீழ்க்கண்ட விசேஷ அம்சங்களும், மற்றும் பல கலாசார விருத்திக் கட்டுரைகளும் தொடர்ந்து வரும்...**

★ஸ்ரீ விஷ்ணு புராணம் ★ஆழ்வார்கள், ஆசாரியார்கள் ஜீவிய சரித்திரங்கள் ★ புகழ் பெற்ற கோவில்களின் ஸ்தல புராணங்கள் ★வேதம், உபநிஷதம், புராணம்,, பஞ்சதந்திரம்—இவைகளிலிருந்து தேர்ந்தெடுத்த சிறு கதைகள் ★ஸ்ரீ அழகியசிங்கரின் அருளுரை ★ விசிஷ்டாத்வைத தத்துவத்தை விளக்கும் விரிவுரை (ஆங்கிலத்தில்)

**தாத்தா, பாட்டி இல்லாத குறையை நீக்க!**

ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா உங்கள் குடும்பத்திலுள்ள பெண்களுக்கும் குழந்தைகளுக்கும், நம் புராணக் கதைகளின் மூலம் தெவிட்டாத இன்பமளிக்கும் வகையில், இனிய தமிழில் நம் பூர்வீக கலாசார வாழ்வை வெளிப்படுத்தும். இப்பொழுது நகர்ப்புறங்களில் நம்முடன் வாழ்ந்து நமக்கு தெய்வீக ஆன்மீக விஷயங்களை உணர்த்த நம் தாத்தாபாட்டிகள் கூட இல்லாத குறையை, இந்தப் பத்திரிகை நீக்கும்.

**சந்தா விவரம்:** ஒரு வருஷம் 12 இதழ்கள் ரூ. 10-00; ஆறு மாதம் 6 இதழ்கள் ரூ. 5-00;
தனிப்பிரதி ரூ. 1 ஏஜண்டுகளிடம் கிடைக்கும்.

சந்தா மற்றும் உங்கள் தபால்களை கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்பவும்:
நிர்வாகி, ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா, 7 Dr. ரங்காச்சாரி ரோடு, சென்னை-18.



பிரபல ஆக்பா இந்தியா லிமிடெட்டின் டைரக்டர் ஸ்ரீ [illegible]. V. அய்யரின் குமாரி சௌபாக்யவதி ருக்மணிக்கும் பிரபல அட்வகேட் ஸ்ரீ ராமகிருஷ்ணய்யரின் குமாரர் சிரஞ்சீவி ராமச்சந்திரனுக்கும் சென்னையில், சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது. நகரப் பிரமுகர்கள் பலரும் வந்திருந்து சிறப்பித்தனர்.

வாழ்க மணமக்கள்

பாரத்தை. உன்னை யாரு இந்தச் சமயத்தில் பள்ளிக்கூடத்திலிருந்து 'வரச் சொன்னார்கள்? பணியாரத்தைத் தொடாதே என்று எத்தனை தடவை சொன்னேன்?'' என்று புகைந்து கொண்டிருந்த சிகரெட்டைத் தூர எறிந்து விட்டு, இத்தனை நேரம் முயன்று செய்த கேக்கு வீணாகிவிட்டதே என்று மகளை, குழந்தை என்றும் பாராமல் அரத்துக் கொண்டே யிருந்தான். கன்னம், முதுகு என்று பளார் பளார் என்று அடித்தான். அடிபட்ட குழந்தை 'வீ'லென்று கத்திக் கொண்டிருந்தாள். அவள் வாயிலிருந்து சர்க்கரை நீர் ஒழுகிக் கொண்டிருந்தது.. பாய்ந்து வந்து குழந்தையைத் தன் பக்கம் இழுத்துக் கொண்ட மரியம் ''உங்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? ஏன் இப்படிப் பச்சைப் புள்ளையைப் போட்டுக் கொல்றீங்க? ஏதோ குழந்தை ஆசையிலே கேக்கிலே கையை வைச்சிடுத்து'' என்றாள்.

கண்கள் சிவக்கக் கோபத்தில் நடுங்கிக் கொண்டிருந்த ஜோஸப், ''விடு அவளைக் கொன்று போட்டு விடுகிறேன். குழந்தையாம் குழந்தை. இப்ப இந்தக் கேக்கை எப்படி முதலாளிகிட்டக் குடுக்கிறது? ஒரு ரூபாயா? இரண்டு ரூபாயா? ஐம்பது ரூபாய் மதிப்பாச்சே? நான்தான் வேறு கேக்குச் செய்து தருகிறேன் என்று சொன்னேனே, அப்படி ஒரு துணிச்சலா இந்தப் பொண்ணுக்கு? இப்படி ஐம்பது ரூபாய் கேக்கு சாப்பிட உன் மகள் இந்த ஏழை வீட்டிலே பிறந்திருக்கக் கூடாது. பணக்காரனுக்குப் பெண்ணாகப் பிறந்திருக்கணும்'' என்று பேசிக் கொண்டே மேலும் அடிக்கக் கையை ஓங்கினான். இடையே புகுந்த மைக்கேல், ''அண்ணி, நீங்க புள்ளையைக் கூட்டிக்கிட்டு வீட்டுக்குப் போங்க. அண்ணன் ரொம்பக் கோபமா இருக்காங்க. போங்க சீக்கிரம். நான் மறுபடியும் சர்க்கரைப் பாகு செய்து இந்த இறக்கையைச் சரிசெய்துவிடுகிறேன்'' என்றான். மரியம் அழும் குழந்தையை அணைத்தவாறு வீட்டுக்குக் கிளம்பினாள். ரோஸியின் துடை, முதுகு எல்லாம் அடிபட்டுச் சிவந்து, வீங்கி ரத்தம் கட்டிக் கொண்டிருந்தது. அதைத் தடவிப்பார்த்த மரியத்துக்கு அழுகையாக வந்தது. இந்த விலை உயர்ந்த கேக்கு செய்ததனால்தானே இப்படியெல்லாம் ஆயிற்று? பேசாமல் சாதாரணக் கேக்கே செய்து கொண்டிருந்தால் இப்படி ஒன்றும் நடந்திருக்காதல்லவா என்று நினைத்தாள். நினைத்துப் பார்த்தால் கவலைவிடவும் அவளுக்குப் பச்சாத்தாபம்தான் தோன்றியது. அவர் எத்தனை சிரமப்பட்டு அந்தப் பணியாரத்தைச் செய்திருப்பார்? முதலாளிக்கு என்ன பதில் சொல்லுவார்? கூலியாக ஐம்பது ரூபாயை வாங்கிக்கொண்டு, உடைந்த கேக்கைக் கொடுத்துவிட முடியுமா? எப்படியோ, கர்த்தரே! நீர்தான் இந்த இக்கட்டிலிருந்து எங்களைக் காப்பாற்றவேண்டும் என்று நினைத்துக் கொண்டாள்.

குழந்தையை அடித்துவிட்டு மனம் குழம்பி நின்றான் ஜோஸப். மைக்கேல்தான் எப்படியோ முனைந்து சர்க்கரைப் பாகினால் பட்டாம்பூச்சியின் இன்னோர் இறகையும் பொருத்திச் சரிப்படுத்தினான். ஜோஸப் தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். எத்தனை நேரம் போயிற்றோ தெரியவில்லை. ''அண்ணே, நீங்க கிளம்புங்க. மழை வரும் போல இருக்குது. மழைக்கு முன்னே முதலாளியைப் பார்த்துட்டு வாங்க. இதோ கேக்கைச் சரி செய்துவிட்டேன்'' என்ற மைக்கேலின் குரல்தான் அவனைச் சிந்தனையிலிருந்து தட்டி எழுப்பியது.

ஜோஸப் எஸ்டேட் முதலாளியின் வீட்டில் கேக்கைக் கொடுத்துவிட்டுப் பணத்தைப் பெற்றுக் கொண்டு திரும்பும்போது சரியாக மாலை மணி ஆறாகிவிட்டிருந்தது. மழை வருமோ என்ற பயத்துக்கே இடமில்லாமல் மழை வந்தேவிட்டது. 'சோ' என்ற இரைச்சலுடன் மழை பெய்து ஊரைக் குளிர வைத்தது. மழையில் நனைந்த தலையைத் துடைத்துக் கொண்டே வீட்டுத் திண்ணையில் காலை வைத்த ஜோஸப் 'பையில் வைத்திருந்த ஐம்பது ரூபாயும் நனைந்திருக்குமோ? சிந்தனையில் அதைக் கவனிக்காமல் இருந்து விட்டோமே' என்று ஜேபியில் கையை விட்டான். அவன் தலை சுழன்றது.



## அடுத்த இதழில்

நவரச நிகழ்ச்சிகள்

**அசரீரி தந்த ஆனந்தம்**

**திபெத் - இன்றைய நிலை**

— தலாய் லாமா அவர்கள் வழங்கும் கட்டுரை

**அயல்நாட்டவருக்குப் பிரயாண வசதிகள்**

— ஆனந்த ராவ் பேட்டி






## மந்திரி வேலை!

குழந்தைகள் வாரப் பத்திரிகையைப் பிரித்துப் பார்த்துக் கொண்டிருந்தனர். அப்போது இந்திரா காந்தி மந்திரி பதவி யேற்ற சமயம். பெரிய பையன் தம்பி தங்கைகளுக்கு இந்திரா காந்தியின் குழவிப்பருவம் முதல் பிரதம மந்திரி பதவி வரை வெளியாகியிருந்த படங்களை விளக்கிக் கொண்டிருந்தான்.

பார்த்துக் கொண்டே இருந்த இரண்டாவது பையன் 'ஏண்டா முதல் படமெல்லாம் இந்திரா காந்திக்கு நிறைய தலைமயிர் இருக்கிறது. மந்திரி படத்தில் கிராப் அடித்திருக்கிறது?'' என்றான்.

அதற்கு உடனே என் மகள், ''ஐயையோ! இது தெரியாதா? மந்திரியானப்புறம் நிறைய வேலை இருக்கும். பின்னிக்கொள்ள, எண்ணெய் தேய்த்துக் கொள்ள முடியுமா? அதுக்குத்தான் கிராப் அடிச்சுக்கிட்டா!'' என்றாள்.



— அ. மேரி, நன்னிலம்

பை காலியாக இருந்தது. பணம் இல்லை. எங்கு போயிருக்கும்? எப்படிப் போயிருக்கும்? முதலாளியிடமிருந்து ஐந்து பத்து ரூபாய் நோட்டை வாங்கிக் கொண்டது அவனுக்கு நன்றாக ஞாபகம் இருந்தது. இந்த அதிர்ச்சியிலிருந்து மீளுவதற்குள் இன்னோர் அதிர்ச்சியும் அவனைத் திகைக்க வைத்தது. சமையற்கட்டிலிருந்து வந்த மரியத்தின் அழுகுரல் தான் அது. கணவனைக் கண்டதும், மரியம் பெண் புலியாகச் சீறி விழுந்தாள். ''இப்போ உங்களுக்குத் திருப்திதானே? குழந்தையை அந்தப் பாழாய்ப்போன கேக்குக்காக அப்படி அடித்தீர்களே! உடம்பெல்லாம் வீங்கியிருந்தது. அழுது துடித்துக்கொண்டிருந்தாள் ரோஸி. வெந்நீர் ஒத்தடம் கொடுக்கலாம் என்று சமையற்கட்டுக்கு வெந்நீர் போடவந்தேன். வெந்நீரை எடுத்துக்கொண்டு வந்து பார்த்தால் குழந்தையைக் காணோம். இந்த மழையில் எங்கே போயிற்றோ? மைக்கேல் தேடிக் கொண்டு போயிருக்கிறான். பக்கத்து வீடுகளில் எல்லாம் தேடியாயிற்று'' என்று கதறினாள். இந்த வார்த்தைகள் காதில் விழுந்தனவோ இல்லையோ, கொட்டும் மழையில் இறங்கி ஓடினான் ஜோஸப்.

''நல்ல பண்டிகை நாளில் எனக்கு இப்படி ஒரு சோதனையா, கர்த்தரே!'' என்று மரியம் கதறி அழுதாள். அவளைத் தேற்ற யாராலும் எத்தனை முயன்றும் முடியவில்லை. ஜோசப்பும் நம்பிக்கை இழந்து வாடிய முகத்தோடு வீட்டுக்கு வந்து ஒரு மூலையில் உட்கார்ந்து விட்டான்.

தடதடவென்று யாரோ படி ஏறி வருவதைக் கண்டு திடுக்கிட்டு எழுந்தான் ஜோஸப். ''அப்பா! இதோ பாரு, எனக்குக் கேக்குக் கிடைத்துவிட்டது. நாங்கிட்டக் கேட்டேன். நீ குடுக்கல்லே. நீ என்னை அடிச்சிட்டே. நமக்கு எது தேவையானாலும் ஆண்டவனைக் கேக்கணும் என்று அம்மா அன்னிக்குச் சொன்னாங்க. அதன்படி நானும் கேக்கு வேணும் என்று கடவுளைக் கேட்க மாதா கோயிலுக்குப் போனேன். 'கடவுளே எனக்கு கேக்கு வேணும்' என்று கேட்டேன். கிடைச்சுது'' என்று கையில் வைத்திருந்த கேக்குடன் குதித்தாள் ரோஸி. ''என் கண்ணே, நீ எங்கே அம்மா போயிட்டே?'' என்று குழந்தையை வாரி அணைத்துக் கொண்டாள் மரியம். இதுவரையில் பேசாமல் இருந்த மாதா கோயில் பாதிரியாரின் வேலையாள். ''இந்தக் குழந்தை தனியா மழையிலே இரண்டு மைல் நடந்து வந்து கர்த்தர் சிலைக்கருகே மண்டியிட்டு, 'எனக்கு பட்டாம் பூச்சி படம் போட்ட கேக்கு வேணும்' என்று கேட்டுக்கிட்டிருந்தது. பிரார்த்தனைக்கு வந்த பாதிரியார் குழந்தையைப் பார்த்துட்டாரு. அவருக்கு அப்பொழுதுதான் எஸ்டேட் முதலாளி வேண்டாம் என்று எத்தனை சொல்லியும் கேட்காமல் கேக்கு கொடுத்திட்டுப் போயிருந்தாரு. 'இத்தனை பெரிய கேக்கு எனக்கு எதற்கு? நான் ஒருவன் இதை எப்படித் தனியாகச் சாப்பிட முடியும்? யாராவது குழந்தைகளுக்குக் கொடுக்க வேண்டியதுதான்' என்று சொல்லிக்கிட்டிருந்தாரு பாதிரியாரு. சமயத்துக்கு இந்தக் குழந்தையின் பிரார்த்தனையைக் கேட்டதும் அவளிடமே கேக்கைக் கொடுத்து, இந்தக் குழந்தையைப் பத்திரமாக வூட்டிலே விட்டுட்டு வா இன்னாரு. குழந்தை நன்றா மழையிலே நனைஞ்சிருக்கு. தலையைத் துடையுங்க'' என்று சொன்னான்.

அங்கிருந்த எல்லோர் கண்களிலும் மகிழ்ச்சியால் கண்ணீர் நிறைந்தது. ஜோஸப் வியப்பினால் வாயடைத்து நின்றான். அவன் கைகள் அவனை அறியாமல் சிலுவைக் குறி விட்டன. மனத்தால், 'பரமபிதாவே, எனக்கு நன்றாகப் பாடம் புகட்டி விட்டாய். எது வேண்டுமானாலும் உன்னிடம்தான் கேட்க வேண்டும். சின்னக் குழந்தை உன்னிடம் கேட்டு அவள் விரும்பியதைப் பெற்றுக் கொண்டு விட்டாள். நான் எஸ்டேட் முதலாளியிடம் கெஞ்சிக் கூத்தாடி ஆர்டர் வாங்கி அதற்குக் கிடைத்த பணத்தையும் தொலைத்து விட்டு வந்து நிற்கிறேன். இந்தக் கிறிஸ்துமஸ் புனிதநாள் எனக்கு விளங்கவில்லை. மனிதனுக்குக் கொடுக்கவும் வாங்கிக் கொள்ளவும் இறைவனால்தான் முடியும்'' என்ற உண்மையைத் தெரிந்து கொண்டேன் என்று நினைத்துக் கொண்டான்.

வெளியே மழை நின்று விட்டிருந்தது. காரில் வந்த முதலாளியின் மானேஜர், ''என்ன ஜோஸப், உனக்கு இத்தனை மறதி இருக்கக் கூடாது. கேக்குக்குக் கொடுத்த பணத்தை மேஜை மேலேயே வைத்துவிட்டு வந்துவிட்டாயே. இந்தா'' என்று பணத்தைக் கொடுத்தார். குழந்தை ரோஸி பட்டாம்பூச்சி படம் போட்ட அந்தக் கேக்கை விண்டு வாய் நிறையத் திணித்துக்கொண்டு அந்த இனிப்புச் சுவையில் லயித்தாள். ஜோஸப் கர்த்தரின் அருளான இனிப்பை நினைத்து நினைத்துச் சுவைத்தான்.



பிற்பகல் மணி இரண்டு இருக்கும்.

அன்றைக்கு என்று வெய்யில் நெருப்பாகக் காய்ந்து கொண்டிருந்தது. தெருவில் நடமாட்டத்தைக் காணோம்.

கொஞ்ச நேரம் உறங்கி விட்டுச் சற்று முன்புதான் கண் விழித்தேன். சாய்வுநாற்காலியில் சாய்ந்து கொண்டு புத்தகத்தைக் கையில் எடுத்தேன். நேற்று மாலையில் புத்தகசாலையிலிருந்து வாங்கி வந்தது. மோலியரின் ஓரங்க நாடகங்கள். புத்தகத்தை எடுத்த போதே புத்தகசாலையின் நிர்வாகி கேட்டார் : ''பார்த்தீர்களா ஸார்.... மூன்று வருஷங்களாக யாரும் சீண்டாத புத்தகத்தை ரொம்பவும் தேடிக் கண்டு பிடித்து எடுத்திருக்கிறீர்கள்!'' அவர் இளவட்டம். பேச்சில் கேலியும் ஏளனமும் அடங்கியிருந்தன. அவர் வயதில் எனக்கு ஒரு பையன் துர்க்காபூரில் வேலையிலிருக்கிறான்....

'இருக்கலாம், மிஸ்டர். எப்போதுமே மிக உயர்ந்த பொருள்கள் அவ்வளவு இலகுவாகக் கைக்குக் கிடைப்பதில்லை! மேனாட்டு இலக்கியங்களில் எனக்கு அப்படி ஓர் அடங்காத ஆசை. அதிலும், நாடகங்கள் என்றால் எனக்குக் கல்கண்டு!' – இப்படி எண்ணிக் கொண்டேன். சொல்லவில்லை.

....ஹை, நான் என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்?.... ஆமாம், சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண்டேன். ஜன்னல் வழியாக வெளிச்சம்



வரும். அத்துடன், தெருவில் நிகழ்பவை 'யெல்லாம் கண்ணில் படும். இருந்த இடத்தை விட்டு எழுந்திராமலே உலக நடப்பைத் தெரிந்து கொள்ளலாம்.

மோலியரின் 'படித்த பெண்'களில் கண் ஓடிக் கொண்டிருந்தது. படிப்பாளி என்ற மயக்கத்தில் வாழ்க்கையைப் புரிந்து கொள்ள இயலாத தாய், வாழத்துடிக்கும் அவளுடைய பெண் – இவர்களின் உரையாடலில் மனம் லயித்திருக்கையில்...

....வெளியே 'லபோ, லபோ' என்ற ஓலம்!

யாரது? என்ன நடந்து விட்டது?

எழுந்திருக்கலாமா வேண்டாமா என்று நான் தீர்மானத்துக்கு வருவதற்குள்ளாகவே என் வீட்டெதிரில் ஒரு சிறு கூட்டம் கூடிவிட்டது.

'....காவேரியில் மிதக்கிறது.... பன்னிரண்டு வயதுப் பெண்.... பச்சை ஜம்பர்..... கனகாம்பரப் பாவாடை.... முகம் தண்ணீரில் மூழ்கி யிருக்கிறது... கரையில் ஒதுங்கி....'

புத்தகத்தை மூடி வைத்தேன். கண்ணெதிரில் சாட்சாத் கடவுளே ஒரு நாடகத்தை நடத்திக் கொண்டிருக்கையில், மோலியர் என்ன, பெரிய கொம்பனோ?....

கதவைத் திறந்து கொண்டு நான் வாசலுக்கு வருவதற்குள் தெரு முழுதும் இந்தத் துயரச் செய்தி ஒலிபரப்பாகி அத்தனை பேர்களும் பரபரப்படைந்து விட்டார்கள். சடலத்தைக் காண விரைந்த சில உற்சாகிகள், நூறு கஜ தூரத்திலிருந்த காவேரிக் கரையை நோக்கி ஓட்டமும் நடையுமாகப் போய்க் கொண்டிருந்தார்கள்.

என் வீட்டை அடுத்து ஒரு சந்து. காவேரிக்குக் குறுக்கு வழி. மனித இயக்கமெல்லாம், இப்போது அங்கேதான். எல்லாக் கால்களும் காவேரிக்குப் போய்க் கொண்டிருந்தனவே தவிர, திரும்பவில்லை. இவ்வளவு சீக்கிரம் திரும்ப மாட்டார்கள். போலீஸ் வந்து, பஞ்சாயத்து நடந்து, சடலத்தை வெளியே எடுத்து.....

''என் கோமளமே, போயிட்டாயேடி.... இ....இ....'' – அவலக் குரல் கேட்டுத் திரும்பினேன். எழுபத்தைந்து வயது அலமுப் பாட்டி கடுகிற மணலைப் பொருட்படுத்தாமல் கண்களில் நீர் சோரப் போய்க் கொண்டிருந்தாள். அப்படியானால்....?

அலமுப் பாட்டியின் பேத்தி, கோமளம். ஐந்து வயதுக்குள் அநாதையாகிப் பாட்டி

அவளுக்கு எட்டு வயதில் ஒரு பெண். பெயர் சம்பங்கி. வீரப்பனிடம் உள்ள கன்றுகளைப் போலவே எலும்பும் தோலுமாய் இருப்பாள். வீரத்துக்குக் குறைவில்லை. பயங்கரமாகத் தோற்றமளிக்கும் 'கிர்' பசுவுக்கு அவளைக் கண்டால் சிம்ம சொப்பனம். இடுப்பில் பால் குவளையை வைத்துக் கொண்டு, என் வீட்டுக் கதவைத் தட்டி, 'யம்மோவ்.....வ்....' என்று அவள் குரல் கொடுப்பாள். 'யம்மோ'வுக்குப் பதிலாக நானே கதவைத் திறப்பேன். மேலாக்கு இல்லாமல் ஒரு நாளும் நான் பார்த்ததில்லை.

காவேரியில் கிடக்கும் பெண்ணுக்கு மேலாக்கு இருப்பதாக யாரும் சொல்லவில்லையே ?

பின், வீரப்பன் ஏன் பறந்து போகிறான்?

பாசம்!... 'தன் பெண்ணாக இருக்குமோ?' என்ற சந்தேகம். 'இருந்து விட்டால்?....' என்ற கவலை.

நான் ஏன் கவலை இல்லாமல் நிற்கிறேன் என்று கேட்டால், இந்த வீட்டில் என்னையும் அந்தக் கிழத்தையும் – என் மனைவியைச் சொல்கிறேன் – தவிர, வேறு, ஈ, காக்காய் கிடையாது. ஒற்றைப் பிள்ளை, துர்க்காபூரில் பெரிய இஞ்சினீயர். கல்யாணமாகி நாலு வருஷங்களாகிறது. சந்தானம் இல்லை. எல்லாம் உண்டாகும். எங்கள் வமிசத்திலே பிள்ளை குட்டி இல்லாதவரே கிடையாது....!



# அதுவோ...?

டி.எஸ்.கே

விடமே வந்து விட்டது. பத்து வயது இருக்கும். பிரும்மா அவளை ஆணாகவே படைக்க விரும்பிக் கொண்டிருந்து விட்டு, கடைசி விநாடியில் பெண்ணாகப் பிறப்பித்துவிட்ட மாதிரி தோன்றும், அவளைப் பார்க்கையில். சம வயதுப் பெண்கள் நாலு பேர்களை ஒரே குத்தில் வீழ்த்துவாள். கோமளம் பச்சை ஜம்பர் அணிந்து நான் பார்த்தது கிடையாது.

''ஏன் பாட்டி, உங்க பேத்திதான் பள்ளிக்கூடம் போயிருக்குமே? பின்னே நீங்க ஏன் அழுறும்?'' என்று யாரோ அவளைக் கேட்டார்கள்.

''மனசு கேக்கலையேடா. என்னமோ, ஏதோன்னு அடிச்சுக்கிறதே!''

பாட்டி நிற்காமல் நடந்தாள்.

அதே சமயத்தில், தெருவையே பிளந்து கொண்டு போகிற மாதிரி ஒரு சைக்கிள் பறந்து வந்தது. வீரப்பன்தான். என் தெருவுக்கு அப்பாலிருந்த குப்பத்தில் வசிப்பவன். பால் வியாபாரம். மதுரை வீரன் கண்கள். கிராப், ஒருபுறம் பம்மிக் கொண்டு நிற்கும். கரளை கரளையான புஜங்கள். முரட்டு மீசை. முண்டா பனியன். கழுத்தில் தாயத்து. அவன் பார்க்கிற பார்வையிலேயே பயந்து மாடுகள் பாலைக் கறந்து விடும்!

அப்புறம், எனக்கு, ஒற்றைப் பெண். மாப்பிள்ளைக்குக் கோயமுத்தூரில் பஞ்சாலையில் வேலை.

எனக்கு என்ன கவலை என்கிறேன்? அந்த 'எருமை மாட்டுக்காரன்', 'என்னடா?' என்றால், 'இதோ, ரெடி!' என்பேன். பின்னை, தூரத்தில் இருந்தால் என்ன? யாராவது கொள்ளி போடுவார்கள். இதை யெல்லாம் ஒரு மாதிரியாக எதிர்பார்த்துத்தான் காசி, கயாவுக்குப் போய் 'எல்லா'வற்றையும் நானே முடித்துக் கொண்டு விட்டேன்.

அட, இவர் ஏன் அழுது கொண்டு போகிறார்? சௌந்திரத்தைச் சொல்கிறேன். அவருடைய பெண் கமலிக்குப் பதினைந்து வயதிருக்கும். பத்தாவதோ என்னவோ படிக்கிறாள். சமர்த்துப் பெண். என்பதுக்குக் குறைந்து மார்க் வாங்கியதில்லை. பதவிசு என்றால், அப்படி ஒரு பதவிசு. மகாராணியைப் போன்ற ஒரு கம்பீரம். பேச்சில், ஒரு நயம். என் சம்சாரத்திடம் ரொம்பவும் ஈடுபாடு. ஆங்கிலப் பாடத்தில் என்னிடம் சந்தேகம் கேட்டுத் தெளிவாள்.

அவள் இன்றைக்குப் பள்ளிக்கூடம் போயிருப்பாளே? பகல் இரண்டு மணிக்கு, அவளுக்கு ஆற்றங்கரையில் என்ன வேலை இருக்கப் போகிறது?....

''நீ ஏண்டி, சௌந்திரம் இப்படித் தவிக்கிறே ?''

''கண்ணுலே பார்க்கிற வரையிலும் நிம்மதி ஏது மாமி?''

—ராம ராமா !

அவ்வளவு அஞ்ஞானம். காவேரிக்குப் போய்ப் பார்க்கிற வரையில் அவள் மனசு கேட்கவில்லை.

'காவேரியில் மிதப்பது தன்னுடைய பெண்ணாக இருக்கக் கூடாதே' என்ற பிரார்த்தனையோடு, இனம் புரியாத திகில் வேறு. சாகாமல் யார் சிரஞ்சீவியாக இருக்க முடியும்? எமனை எதிர் கொண்டு அழைக்க வேண்டாம். அவன் வந்து விட்டால், தைரியமாகவாவது இருக்கக் கூடாதோ ? எங்கே, எப்படி, எவ்விதம் அவன் வருவான் என்பது மட்டும் தெரிந்து விட்டால், ஒருகால்.... 'யட்சப்ரச்னை'யில்கூட யட்சன் தருமபுத்திரனைப் பார்த்து இப்படித்தானே ஏதோ ஒரு கேள்வி கேட்கிறான்.

வெங்கிட்டுவா போகிறான் அங்கே? ஆமாம். அவனுடைய தங்கை ஒருத்தி இருக்கிறாள். ஒரு கால் வழங்கவில்லை. விந்தி விந்தி நடப்பாள். பார்வை மட்டும், ஒரு யோகியின் பார்வை. வாய் திறந்து பேசுவது அபூர்வம். என்னுடைய வீட்டுக்கு வந்து தினமும் பேப்பர் படிப்பாள்.

வெங்கிட்டுவுக்கு என் மண்டியில் வேலை. அவனைக் 'காக்கைப் பிழிந்து' வேலை வாங்கினாலும், சம்பளம் கொடுக்கும் போது மட்டும் 'என்னும் தண்ணீரும் இறைக்கிற' மாதிரி தான் முதலாளி நடப்பாராம்! அவர் 'என்' என்பதற்கு முன் 'எண்ணெயாய்' நிற்பான். அவன் கவலையெல்லாம் கிடைக்கிற கண்டைக் காய் சம்பளத்தில் 'என்' விழுந்து விடக் கூடாதே என்பதுதான் !

குடும்பத்தை நிர்வகிக்கிற சாமர்த்தியத்தை அவனிடம் கற்றுக்கொள்ள வேண்டும். அவனிடம் என்ன? அவன் தங்கை விசாலத்திடம் கற்றுக் கொள்ள வேண்டும்.

அந்தப் பெண்ணு..... வந்து.....தலை, தலை.... கிட்டு சந்து வழியே திரும்பி வந்தான். வெறும் வாயை அசைத்துக் கொண்டிருந்த ஒரு சிலர், அவனுக்காகவே காத்துக் கொண்டிருந்ததைப் போல், 'என்ன, என்ன?' என்று கேட்டார்கள்.

''நம்ம தெருப் பெண் இல்லையாம்.....''

எல்லோருக்கும் ஒரு விடுதலை ஏற்பட்ட மாதிரி இருந்தது. பத்து நிமிஷ அழுத்தம். நொடியில் மறைந்தது.

என் வீட்டுக்கு எதிர்ச்சாரியில் இரண்டாவதாக ஓர் ஓட்டுக் கட்டடம். மிராசுதாரரின் வீடு. அவர் இல்லை இப்போது. பத்துவேலியில் எட்டு வேலி மறைந்த போதே அவரும் மறைந்து போனார். அவருடைய பத்தினி இருக்கிறாள். டமாலி என்ற அழகான பேர் படைத்த பையன். இருபத்து நான்கு வயது. உடல் வளர்ச்சி வயதை ஆமோதிக்கும். உள்ளம் மட்டும் அதில் பாதியைத்தான் எட்டியிருந்தது. எங்கேனும் பாம்பாட்டியையோ, வித்தைக்காரனையோ கண்டால் ஆவல் பொங்க நின்று விடுவான்.

ஆறும் படிவத்தில் மூன்று தடவை அவன் தடுக்கி விழுந்ததும், உலகத்தில் உள்ள அத்தனை தெய்வங்களையும் அவனுடைய தாயார் சபித்துவிட்டு, ''இனி மேல் பள்ளிக்கூடம் போக வேண்டாமடா, கண்ணு!'' என்று சொல்லி விட்டாள். ''உனக்கு என்னத்துக்கு இந்த எழவு படிப்பெல்லாம் ? இரண்டு வேலி — காவேரிப் பாய்ச்சல் — இருக்கு. மூணு தலைமுறைக்குப் போதும் !''

டமாலி பார்ப்பதற்கு வாட்ட சாட்டமாக இருப்பான். சிந்தித்துச் செயல் புரிய வேண்டிய காரியங்கள்தான் அவனுக்குச் சிரமமானவை. ஒரு மூட்டை நெல்லைத் தலையில் வைத்துக் கொண்டு ஒரு பர்லாங் ஓடக் கூடியவன். நெல் அறுவடையாகி வந்து, பத்தாயத்தில் கொட்டும் போது அவன் சுறுசுறுப்பையும் புஷ்டியையும் கண்டு பண்ணையாட்கள் பிரமித்துப் போவார்கள்.



விழுந்ததை எடுக்கலாமா ?

ரமேஷை அழைத்துக் கொண்டு வெளியே போயிருந்தோம். என் கையைப் பிடித்தவாறு நடந்து வந்து கொண்டிருந்தான். அவனது மறு கையிலிருந்த முழு வாழைப்பழம் கீழே விழவே, 'அம்மா, பழம், பழம்!' என்று கூவினான். பாதை மிகவும் அசுத்தமாக இருந்தபடியால் 'போனால் போகிறது. வீட்டுக்குச் சென்றதும் வேறு பழம் சாப்பிடலாம்' என்றேன்.

'அம்மா! மண்ணைத் துடைச்சிட்டு, கழுவிட்டுச் சாப்பிடறேனே' என்றான் கம்மிய குரலில். நான் கோபத்துடன், 'சீ! அசிங்கம். ரோட்டில் எவ்வளவு அழுக்கு, எச்சில் பார்த்தாயா? வியாதி வரும்' என்றேன்.

அவன் கொஞ்சம் முரண்டு பிடிக்கவே, 'நீ என்ன வைத்தியக்காரனா? பூச்சாண்டியா? அவன் தான் அழுக்கெல்லாம் சாப்பிடுவான். அடம் பிடிப்பான்!' என்று சீறினேன். அவன் மௌனமானான்.

சிறிது தூரம் சென்றிருப்போம். ரமேஷ் ஒரு கல் தடுக்கக் கீழே குப்புற விழுந்தான். உடை, முகம் முழுதும் புழுதி. அவனுடைய உடலிலிருந்த மண்ணைத் தட்டி விட்டு இடுப்பில் தூக்கிக் கொண்டு அவன் அழாமல் இருக்க அவனுக்கு நிறைய முத்தம் தந்தேன்.

'அம்மா! நீ பூச்சாண்டியா, வைத்தியக்காரனா?' என்று கேட்டதும் திகைப்புற்றவளாய் அவனைப் பார்த்தேன். பயத்துடன் அவன் தொடர்ந்து, 'நான் மண்லே விழுந்தேன். என்னைத் தட்டிட்டு முத்தம் தர்றே! உனக்கு வியாதி வந்துடாது?' என்று கேட்டான். நான் என்ன பதில் கூறுவது ?



-பூமா சுப்ரமணியம்,

டெக்லூர், மகாராஷ்டிரம்


பிரதி
திங்கட்கிழமை:
மதராஸ்
சிங்கப்பூர்
பெர்த்
ஸிட்னி
நந்தி
பிரதி
வெள்ளிக்கிழமை:
மதராஸ்
சிங்கப்பூர்
எங்கள் விமானத்தில்
சிங்கப்பூர்
செல்லுங்கள்!
பிரதி திங்கட்கிழமையும்
வெள்ளிக்கிழமையும்

இப்போதும் அவன் பத்தாயத்தின் மேல் தான் 'வேலை'யாக இருந்தான். பத்தாயம், பெரிய பத்தாயம். பத்து அடிக்கு மேல் உயரம். அதற்கேற்ற அகலம். தட்டுமுட்டுச் சாமான்கள், ஒரு வண்டி நிறைய, அதன் மேல் கிடக்கும். அங்கேதான் டமாலி குடைந்து கொண்டிருந்தான்.

என் வீட்டெதிரில் நின்ற கூட்டம் கலையத் தொடங்கிய போது, டமாலியின் தாயார் வெளியே எட்டிப் பார்த்திருக்கிறாள். விஷயம் என்ன என்று தெரிந்து கொள்ளாவிட்டால் ஆவல் அடங்குமோ?

''என்ன சேதி?'' என்று ரங்கனைப் பார்த்துக் கேட்டாள். ரங்கனின் தகப்பனார், ஒரு காலத்தில், அவளுடைய பண்ணையில் காரியஸ்தராக இருந்தார்.

''யாரோ பெண்ணாம். காவேரியில் மிதக்கிறதாம்......''

பத்தாயம் வீட்டின் இரண்டாம் கட்டில் இருந்தது. டமாலி, பத்தாயத்தின் மேல் இருந்தான். வாசல் பேச்சு அரைகுறையாய்க் காதில் விழுந்தது.

''அம்மா.......'' என்று அலறுகிறான்.

வந்தாள்.

''யாரு?.... என்ன?.....''

''யாரோ பெண்ணாம். காவேரியில் மிதக்கிறதாம் !''

''என்னது?''

''பெண்......''

''பெண்?''

''காவேரியில்.....!''

''காவேரியில்?''

''மிதக்கிறதாம்!....''

''மிதக்கிறதா?.....''

—இவ்வளவு பெரிய செய்தியைக் கேட்ட பின் அவனால் பத்தாயத்தில் இருக்க முடியுமா? அவனால் காவேரிக் கரைக்குப் போகாமல் இருக்க முடியுமா? அந்தச் சடலத்தைப் பாராமல் இருக்க முடியுமா?....

இறங்குவதற்காக, சாத்தியிருந்த ஏணியில் படபடவென்று காலை வைத்தான். இழை சிமெண்டுத் தரை. வழவழவென்று சிவப்பு வண்ணச் சிமெண்டு. அவன் தாயார் ஏணியைப் பிடித்துக் கொள்ளும் வரைகூட அவனால் பொறுக்க முடியவில்லை. நிதானப்படுத்திக் கொள்ளாமல் முதல் படியில் காலை வைத்ததுமே, சர்ர்ர்ர்ர்.....ர்ர்......

அவனுடைய அகன்ற மார்பு தரையைத் தழுவியது. முகம், விகாரமாய் மாறியது. '' ம்..... ம்.....'' என்ற முனகல். அப்புறம்? அவ்வளவே....

ஆமாம். அவ்வளவுதான்.

கால்மணிக்குள் தெருவே திமிலோகப்படத் தொடங்கி விட்டது.

''என்ன ஸார், அநியாயமாய் இருக்கிறது? காலையில் பார்த்தேன், டமாலியை. என்னால் நம்பவே முடியவில்லை !....''

''காலம் கெட்டுப் போச்சு என்கிறேன். இப்பத்தான் கொஞ்ச முன்னே, காவேரியில்!''

''அந்தப் பெண் பிழைத்துக் கொண்டு விட்டாள் ஸ்வாமி !''

''என்ன!''

-»-»-»-»-»-»-»-»-»-»

இன்ன மொழி

## துக்கத்தை மறக்கும் மருந்து

என்னுடைய செல்வனை, 'டேய் முரளி! மழை வந்துடுத்து. நனைந்து கொண்டிருக்காதே. ஜுரம் வந்துடும், உள்ளே போ!' என்று விரட்டினேன்.

இரண்டரை மாதங்களுக்கு முன்பு அவன் கிட்டத்தட்ட பத்து நாட்கள் ஜுரத்தால் கண் திறக்காமலும், எதையும் சாப்பிடாமலும் படுத்திருந்ததால், இரவில் எனக்குத் தூக்கமே கிடையாது. இந்நிலையில் ஒரு நாள் இரவு மணி பன்னிரண்டிருக்கும். மழை விடாமல் பெய்து கொண்டிருந்தது. நானும் என் மனைவியும் அவனுக்குப் பக்கத்திலேயே உட்கார்ந்திருந்தோம். திடீரென்று என்னை அழைத்தான் முரளி. 'என்னடா முரளி' என்று அவனுடைய கையைப் பிடித்தேன். 'மழை பெய்யுது. நான் நனைஞ்சாலெனக்கு ஜுரம் வந்துடும்னு நீ அன்னிக்குச் சொல்லலே.... நாக்கு' என்று கூறியவன் பெரிதாக அழுவதற்கு ஆரம்பித்துவிட்டான். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. ஆனால் அவனுடைய அம்மா கண்டுபிடித்துவிட்டாள். எங்களுடைய குடிசை வீடு ஒழுகி, தண்ணீரில் அவனுடைய தலையணையின் ஓரம் நனைந்து ஈரம் அவனுடைய தலைமாட்டுக்கு வந்துவிட்டிருந்தது. உடனே அவனைத் தூக்கி வேறு இடத்தில் படுக்க வைக்கப் போன என்னுடைய மனைவி உரக்க அழ ஆரம்பித்து விட்டாள். காரணம் என் அருமைச் செல்வன் முரளியைப் படுபாவி அந்த எமன் அழைத்துக் கொண்டுவிட்டான்.

அவனிருந்தவரை பேசிய மழலை மொழிகள் அனைத்தும் என் நினைவுக்கு வரும்போது சற்று என் துக்கத்தை மறந்து விடுகிறேன். ஆர். பாபு,
சென்னை-28

'இன்னமொழி'க்கான
பரிசுத் தொகை

இந்த இதழில் வெளியான பன்னிரண்டு துணுக்குகளுக்கும் ஒவ்வொன்றுக்கும் ஐந்து ரூபாய் விதம் பகிர்ந்தளிக்கப்பட்டது.

— ஆசிரியர்.

-«-«-«-«-«-«-«-«-«-«

''மூழ்கிச் சில நிமிஷங்கள்கூட ஆகவில்லையாம். வண்டிச் சக்கரத்தில் வைத்துச் சுற்றினார்களாம். மூச்சு வந்து விட்டதாம். அதிசயமாயிருக்கிறது !''

''இதைவிடவா ?......''

உள்ளே வந்தேன்.

யாரோ என்னைப் பார்த்துச் சிரிக்கிற மாதிரி இருந்தது. மோலியரோ? 'படித்த பெண்களோ ?'

ஆனால்.....? சிரிப்பு சூனியத்திலிருந்து கேட்கிறதே ?

நீங்கள் என்ன சொல்வீர்கள்? நாம் அறியாமல், நம்மை மயக்கி, நம்மை ஆட்டிப் படைத்து நடத்திச் செல்கின்ற நம் வினைப் பயனின் மகத்தான சக்திக்கு நீங்கள் என்னமோ பெயர் சொல்வீர்களே, அதுவோ?

# வட்ட மேஜை

- ★ என்ன தொல்லை!
- ★ "அண்ணு!"
- ★ 'பண்பாட்டுத் திலகம்!'
- ★ மொரார்ஜி ஏமாற்றவில்லை!

**நா**ன் வட ஆர்க்காடு ஜில்லாவில் உள்ள எனது சொந்தக் கிராமத்திலிருந்து அரிசி கொண்டுவரச் சென்னை ஜில்லா கலெக்டருக்கு மனுச் செய்திருந்தேன். பல கஷ்டங்களுக்கு உள்ளான பின் மூன்று மாதங்கள் கழித்துச் சென்னை ஜில்லா கலெக்டர் ஸ்ரீ எல். எம். வாசகம், ஐ.ஏ.எஸ். அவர்களை கையொப்ப மிட்ட பர்மிட் எனக்குக் கிடைத்தது. பிப்ரவரி 28ந் தேதி வரை பர்மிட்டுக்குக் கால வரம்பு கொடுத்திருந்தார். அந்த பர்மிட்டில் சொல்லியுள்ளபடி கிராம அதிகாரியிடம் கையெழுத்து வாங்கி அரிசி கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்தேன். ஆனால் வழியில் செக் போஸ்டில் அரிசியை அனுமதிக்க மறுத்து விட்டார்கள். சென்னை ஜில்லா கலெக்டர் கொடுத்த பர்மிட் செல்லாது என்றும், எங்கள் ஊர் தாலுக்கா தாசில்தாரிடமிருந்து பர்மிட் வாங்கி வந்தால்தான் அரிசியை அனுப்பலாம் என்றும் கூறினர்.

ஒரு ஜில்லா கலெக்டர் கொடுத்த பர்மிட் செல்லாது என்ருல், அவர் கீழ் வேலை செய்யும் தாலுக்கா தாசில்தார் தரும் அனுமதிச் சீட்டுக்கு இருக்கும் மதிப்பு ஒரு ஜில்லா கலெக்டர் தரும் அனுமதிச் சீட்டுக்கு இல்லை என்றுதானே பொருள்படும்?

மறுபடியும் தாலுக்கா தாசில்தாருக்கு மனு செய்ததில், சென்னை ஜில்லா கலெக்டர் கொடுத்த பர்மிட்டை வாங்கிக் கொண்டு வேறு ஒரு பர்மிட் இரண்டு நாள் காலத் தவணையுடன் கொடுக்கப்பட்டது. பிப்ரவரி 28ந் தேதி வரை தவணை கொடுக்கப்பட்டிருந்த பர்மிட் போய், பிப்ரவரி 18ந் தேதிக்குள் அரிசி எடுத்துச் செல்லப்பட வேண்டும் என்று பிப்ரவரி 16ந் தேதி தாலுக்கா தாசில்தார் பர்மிட் கொடுத்தார்.

மக்கள் இவ்விதம் எத்தனை நாட்களுக்கு அவதிப்பட வேண்டும்? தன் சொந்த நிலத்திலிருந்து விளையும் அரிசியை அவர்கள் வசிக்கும் இடத்துக்கு சொந்த உபயோகத்துக்கு எடுத்து வர இவ்வளவு தொல்லைகள் என்ருல் மற்றவர் அடையக்கூடிய துன்பத்தைப் பற்றிச் சிந்தித்துக்கூடப் பார்க்க முடியவில்லை.

கோடம்பாக்கம்
18–2–66 — எம். வாசுதேவன்

**ப**டிப்போரின் நெஞ்சைப் பிழிந்தெடுத்து நெகிழச் செய்யும் கலையில் மிகவும் வல்லவராகிவிட்டார் 'மகரிஷி'. அவர் எழுதிய "அண்ணு" என்ற குறுநாவல் அவருடைய எழுத்தாற்றலுக்கு ஓர் எடுத்துக்காட்டாகவும் மனிதாபிமானத்துக்கு ஒரு சான்ருகவும் விளங்குகிறது. 'இந்து'வின் படைப்பு மிகவும் பவித்திரமானது; உன்னதமானது; உருக்கமானது. "அழகிய உள்ளத்தில் காதல் பிறக்கலாம். ஆனல் புனிதமான உள்ளத்தில் தான் வாஞ்சை பிறக்க முடியும்!" — இந்த வரிகள் ஒவ்வொரு மனித இதயத்திலும் வைரம் போல் ஜொலிக்க வேண்டும்.

சென்னை–23
14-2-66 — வி. ரா. சந்திரன்

**ம**கரிஷியின் "அண்ணு" என்ற குறுநாவலைப் படித்து, உளம் நெகிழ்ந்து கண்ணீர் சிந்தினேன். மனத்தை உருக்கிவிட்டது. சகோதரபாசத்தோடு பழகும் தங்கைகளைப் பார்த்துக் கண்டபடி பேசும் கயவர்களுக்கு இக்குறுநாவல் ஒரு சவுக்கடியாக அமையும்.

சென்னை
11–2–66 — இரா. கந்தசாமி

"**க**ல்கி"யில் இவ்வாரம் வெளியான ஒரு துணுக்கில் சிப்பாய்களும் படையினர்தான் நேரம் கழித்து வருவார்கள் என்று இருக்கிறது. எனக்கு இதைப் படித்தவுடன் வருத்தமாயிருக்கிறது.

ஈரோடு
17–2–66 — ஏ. ஆர். அனந்தராம ஐயர்

● நகைச்சுவைத் துணுக்கைப் படித்துவிட்டு வருத்தப்படலாமா?

'**அ**ரசியலில் தனி மனிதன்' என்ற ஒரு கட்டுரையை மட்டுமே ஆய்ந்து பார்த்தாலும் கூட நாவலர் திரு நெடுஞ்செழியனைப் 'பண்பாட்டுத் திலகம்' என்றழைக்கலாமே?

திருநெல்வேலி
14–2–66 — சி. வேலாயுதம்

**ஸ்ரீ** மொரார்ஜி எதிர்க்கட்சிகளை ஏமாற்றவுமில்லை, எதிர்க்கட்சிகள் ஏமாறவுமில்லை. காங்கிரஸ்காரர்கள்தான் மொரார்ஜி எதிர்க்கட்சிக்காரர் என்ற தோற்றம் உண்டாகும் வகையில் போட்டியைத் தீவிரப்படுத்தி, ஜனநாயகத்தை மூடி மறைத்து, எதேச்சாதிகார முறையில் நடந்த போட்டியைப் போல் நடத்தினர்கள். ஸ்ரீமதி இந்திரா அவர்களைப் பிரேரணை செய்த போது பலத்த கைதட்டல் இருந்தது. ஆனல் மொரார்ஜியை ஆதரித்தவர்கள் கைதட்டக்கூட பயந்திருந்தார்கள். இந்த வகையில் காங்கிரஸ் மேலிடத்தின் சர்வாதிகாரப் போக்குத் தெளிவாகிறது. ஸ்ரீமதி இந்திரா வெற்றி பெற்றதற்கு எங்கள் ஊரில் காங்கிரஸ்காரர்கள் மிட்டாய் வழங்கினர்கள். மொரார்ஜியை எதிர்க்கட்சிக்காரர் போல் பாவித்துக் கொண்டது எவ்வளவு கேவலம்! எதிர்க்கட்சிக்காரர்கள் மொரார்ஜியை நன்கு புரிந்து கொண்டிருக்கிறர்கள். அந்த அளவு காங்கிரஸ்காரர்கள் புரிந்து கொண்டிருந்தால் பிரதமர் தேர்தலில் இவ்வளவு சூடும், அமெரிக்காவிலிருந்தும், லண்டனிலிருந்தும் காங்கிரஸ் அங்கத்தினர்களைத் தேர்தலுக்காக இறக்குமதி செய்யவும் தேவையில்லை.

திருச்சி
19–2–66 — வி. விசுவநாதன்

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

# 75 பைஸா மிச்சப்படுத்துங்கள்

# மக்ளீன்ஸ்

## இரட்டை பாக் வாங்குவதன்மூலம்




MTP I P 266 T

Registered as a Newspaper in Ceylon